# இயல் மூன்று

# தூது இலக்கியங்களில் பண்பாட்டுக்கூறுகள்

இலக்கியங்களைப் படைக்கும் படைப்பாளர்கள் காலத்தில் பயன்பாட்டில் இருந்த பழக்க வழக்கங்களையும் நம்பிக்கைகளையும் சமயங்களையும் தங்களது படைப்பில் வெளிப்படுத்துவதுண்டு. அவ்வகையில் தூது இலக்கியங்களும் இதற்கு விலக்கல்ல. இவை சமுதாயத்தின் இரத்த ஓட்டங்களையும் உணர்வுகளையும் புலப்படுத்துவதாக விளங்குகின்றன. மனிதனின் மனக்கிளர்ச்சி, தேவைகள், விருப்பம், இச்சை என இன்னபிற இயல்புகள் தூது இலக்கியங்களில் பின்னிப்பிணைந்து காணப்படுகின்றன. ஏராளமான உண்மைகள் இதனுள் பொதிந்து கிடக்கின்றன. இவற்றில் இடம்பெறும் பாடல்களின் கருத்துக்களை நோக்கும் பொழுது வாழ்வின் அடிப்படைக் கூறுகளை வெளிச்சம் போட்டுக் காட்டுவனவாகவே உள்ளன. அக்காலகட்ட மக்களுக்கு ஏற்ப அவர்களின் பழக்க வழக்கங்கள், நம்பிக்கைகள், சமயங்கள் தூது இலக்கியத்தில் புலப்படுத்தப்பட்டுள்ளன. பல பண்பாட்டுச் செய்திகளை உள்ளடக்கியதாக உள்ளன. எனவே இத்தகைய கூறுகளை ஆராய்வது அவசியமானதொன்றாகின்றது. எடுத்துக் கொண்ட ஆய்வு நூல்களில் விறலி விடு தூது நூல்கள் தவிர, பிற தூது நூல்கள் இவ்வாய்வுக்கு எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளன.

## அரசியல் நிலை

### ஆட்சிமுறை

பாட்டுடைத் தலைவன் முத்துவிசயரகுநாத சேதுபதி மீது பாடப்பட்டது பணவிடு தூது. இந்நூலில் அவனுடைய பெயர், இனம், குலம், சமயம், வீரம், கொடை, ஆட்சி முறை, நாட்டு எல்லை, உருவப் பொலிவு, உறவினர்கள் போன்ற

குறிப்புக்கள் காணப்படுகின்றன. சேதுபதி சைவ சமயத்தைச் சார்ந்தவனாக இருக்கலாம் என்பதனை,

" பாடலுக்கு நல்ல பதத்தாற் சிவனாடு
மாடலுக்குச் சிந்தையென்று மம்பலத்தான்"[1]

என்ற கண்ணியின் வாயிலாக அறிய முடிகிறது. இவன் பிற சமயங்களையும் வெறுக்கவில்லை என்பதை,

" கங்கைகுலத் தோனறிவுங் கர்த்த விசுவாசமுமாந்
தங்கள் குலவித்தை தனைவளர்த்தோன்"[2]

என்ற கண்ணியின் வழி புலப்படுகிறது. இதன்வழி, தன்னுடைய ஆட்சிக் காலத்தில் கிறித்தவ சமயம் வளர்வதற்கு உறுதுணையாக விளங்கியுள்ளான முத்துவிசயரகுநாதசேதுபதி.தன்னுடைய அரசியல் நிர்வாகத்தைத் தானே தலைமையேற்று நடத்தியுள்ளான். செங்கோல் தவறாமல் நேர்மையான ஆட்சி புரிந்திருக்கிறான். இவன் ஆட்சி நடத்துவதற்கு உறவினர்கள் உதவியாக இருந்துள்ளனர். ஒவ்வொரு நாளும் அரசவைக் கொலுவில் வீற்றிருந்து நிர்வாகம் செய்துள்ளான்.* பெரிய அளவில் இருக்கும் பாளையங்களைப் பல பாளையங்களாகப் பிரித்து, தன் கட்டளைக்கு உட்பட்டவர்களை அங்கு நியமித்துள்ளான். அவர்களிடமிருந்து கப்பம் வாங்கியுள்ளான் என்பதும் அறிய வருகிறது.*

## சேதுபதியின் உறவினர்கள்

284, 309 முதல் 315 வரை உள்ள கண்ணிகளில் முத்துவிசயரகுநாத சேதுபதியின் உறவினர் பெயர்கள் வரிசையாகக் கூறப்பட்டுள்ளன. இவருடைய

---

1. இரா.நிர்மலா தேவி (பதி.ஆ.), முத்து விசயரகுநாத சேதுபதி மீது பாடிய பணவிடு தூது, ப.98.
2. மேலது, ப.100.
* மேலது, கண்ணி: 350.
* மேலது, கண்ணி : 332.

தந்தை தெய்வகன்னி என்பவர். சேதுபதியின் சிற்றப்பாக்கள் திருவுடையான், பூவிக்கினியான் ஆகியோர். திருஞானபூபாலனின் தந்தைக்குச் சேதுபதி மாமன் முறையாவார். தெய்வ கன்னிப் பூபாலன் என்பவருக்கு இவர் மைத்துனராக விளங்கியுள்ளார். சேதுபதிக்கு மைத்துனனாக அம்பலவாணன் என்பவர் இருந்திருக்கிறார். சேதுபதியின் தம்பி சிவபரனாதன். தமிழ் முத்து, தெய்வ கன்னி ஆகியோர் சேதுபதியின் மகள்களை மணந்து கொண்டவர்கள். இவ்வுறவினர்களே சேதுபதியின் ஆட்சி நிர்வாகத்தில் பெரும் பங்காற்றியுள்ளார்கள் என்பது அறிய வருகிறது.

## ஆட்சியாளர்களின் பெயர்கள்

சேதுபதியின் ஆட்சிக்காலத்தில் பாளையங்களாகப் பிரிக்கப்பட்டிருந்த பகுதிகளை ஆட்சி செய்தவர்களின் பெயர்கள் கண்ணிகள் 83 முதல் 90 வரை காணப்படுகின்றன. திம்மானாய்க்கன், சேருகான், பரதஞ்செயலராயன், வெங்கிட்டராயன், வெறுராயன், ராமப்பயன், ராமச்சந்திரயனஞ்சையன், சலம்பன், சாமந்தன், தொண்டமான், ராசிபுத்தன், தம்பிசெட்டி, அட்டாலைச் செட்டி, அக்காரெட்டி, அனந்தாள்வான், தட்டாரிநாகன், சோழியன், பூச்சயன், தும்முசுகாமயன் போன்றவர்கள் ஆட்சி செய்துள்ளதை இத்தூது நூல் எடுத்துரைக்கிறது. “விஜயநகர அழிவுக்குப் பின் மதுரை, தஞ்சை நாயக்கர்களின் செல்வாக்குக் குறைந்து, மிகச்சிறு பகுதிகளை அவர்கள் ஆண்டு வர, பல நாயக்க வமிசத்தார் நாலாபக்கமும் சிதறிச் சிறு சிறு பாளையப்பட்டுக்களை ஆளும் பாளையக்காரர்களாக ஆயினர்”[3] என்னும் கருத்து இங்கு ஒப்புநோக்கத் தக்கது. இப் பணவிடு தூது வாயிலாக முத்துவிசயரகுநாத சேதுபதியின் நிர்வாகத்திறமை, உறவினர்கள் பற்றிய செய்திகள், அவனுக்குக்கீழ் ஆட்சி செய்தவர்களின் பெயர்கள் ஆகியவற்றை உணர முடிகின்றன.

---

3. இரா.நிர்மலா தேவி (பதி.ஆ.), முத்துவிசயரகுநாத சேதுபதி மீது பாடிய பணவிடு தூது, ப.58.

பஞ்சவன்னத் தூது யாழ்ப்பாணம் இணுவைப் பகுதியை ஆட்சி செய்த காலிங்கராயன் என்ற மன்னனின் மகன் கைலாயநாதனின் சிறப்புக்களைக் கூறுகிறது. அவனுடைய படைத்தலைவர்களாக வன்னிய முதலியர் என்பவர்கள் இருந்திருக்கின்றனர். கைலாய நாதன் பலதேசத்து மன்னர்களுடன் போர் செய்து வெற்றி கண்டவன் என்பது இத்தூது நூலில்.

" கங்கர் மகதரொடு கங்கர் கோசலர்
குடகர் கருநடர் வடுகரொடு தெலுங்கர்
மாளவர் மராடர் வங்கர் கௌசலர்
அங்கர் பொருவரு நூறாயிரங் களங்கள்
மறங்கண்ட புயத்தான்"[4]

எனும் பாடல் தெரிவிக்கின்றது.

## கைலாயநாதனின் பரிவாரங்கள்

கைலாயநாதன் அரண்மனையை விட்டு வெளியே செல்லும் போது தன்னுடன் தன் பரிவாரங்களையும் அழைத்துச் சென்றுள்ளதைப் பஞ்சவன்னத் தூது விளக்குகிறது. விநாயகர், சிவகாமியம்மை, கந்தவேள், சிவன் ஆகிய கடவுள்கள் எலி, பொன்னால் செய்யப்பட்ட தேர், மயில் அழகிய இருக்கை ஆகியவற்றில் அமர்ந்து எழுந்தருளியுள்ளனர். அவனுடைய படைத்தலைவர்களாக விளங்கும் வன்னிய முதலியர் குதிரைகளிலும் எட்டுத்திசைகளிலும் அவனுடைய ஆட்சிக்குட்பட்ட அரசர்கள் பல்லக்குகளிலும் வந்துள்ளனர். வச்சிரம், எழு, வேல், அம்பு, சூலம், தண்டு, சக்கரம், ஈட்டி, சங்கம், வில், பணை ஆகியனவற்றை ஏந்திய படைவீரர்கள் அணிவகுத்தனர். அரச கொடியை உயரப்பிடித்து யானைகளில் இருபக்கமும் அணிவகுத்து வன்னிய முதலியரும். உறவினர்கள் வலப்புறத்திலும்

---

4. க.இ.க.கந்தசுவாமி (தொ.ஆ.), இணுவைச் சின்னத்தம்பிப் புலவர் அருளிய பஞ்சவன்னத் தூது, ப.116.

சென்றுள்ளனர். தாளம், குடம், முழவு, மேளம் முதலியன இசைக்க வாள் அணித்த அரசன் கைலாயநாதன் அரசவீதியில் வருவதை, இத்தூது சுட்டிக் காட்டுகிறது. பல நாட்டு அரசர்களும் கைலாயநாதனின் அதிகாரத்திற்குட்பட்டு விளங்கியதன் வாயிலாக, அவன் அக்காலத்தில் ஆட்சி செய்த பேரரசர்களுள் வீரம் பொருந்தியவனாகத் திகழ்ந்திருக்கிறான் என்ற செய்தியை இத்தூது நூல் விளக்குகிறது.

## செங்குந்தர் வரலாறு

செங்குந்தர் துகில்விடு தூது நெசவாளர்களைப் பற்றிக் கூறுகிறது. செங்குந்தர்களின் வரலாற்றை நோக்கும் பொழுது அவர்கள், "உமாதேவியின் பாதச்சிலம்பில் உதிர்ந்த நவமணிகளில் அப்பார்ப்பதியார் திருவுருவத்தைக் கண்ணுற்றுச் சிவபெருமான் கொண்டருளிய இச்சையால் கருவுற்ற ஒளியுடைய நவரத்தினப் பெயர் கொண்ட மகளிர்களிடத்தில் அதிமேம்பாடடைந்த வீரத் தன்மையுடன் உதித்த பெரிய நவத்தினையுடைய வீரவாகுதேவர் முதலிய நவவீரர்களின் வழித்தோன்றினவார் இச்செங்குந்தர்"[5] என்பர். இச்செய்தியின் வாயிலாகச் செங்குந்தர்கள் வீரவாகு தேவரின் வழி வந்தவர்கள் என்று அறிய முடிகின்றது. நூல் நூற்கும் கருவிகள் இல்லாத காலத்தில் இச்சமூகத்தைச் சார்ந்த ஆண்களும் பெண்களும் கைகளினாலும், சிறு கருவிகளாலும் பஞ்சிலிருந்து நூல் நூற்று ஆடை உருவாக்கியுள்ளார்கள். "உழவுக்கு அடுத்தபடியாகப் பெரும் அளவில் நடந்த நெசவுத் தொழிலில் ஈடுபட்டு, மக்கள் மானம் காக்க உடை அளித்ததுடன் தறிக்கடமை, தறி ஆயம், தறிக்காணம், தறிக்காசு, நூல் ஆயம் முதலிய பல்வேறு வரிகள் மூலம் அரசின் செல்வ வளத்திற்கும் காரணமாக இருந்தது செங்குந்தர் சமுதாயம்"[6] என்கிறார் செ.இராசு.

---

5. பரமானந்த நாவலர், செங்குந்தர் துகில்விடு தூது, ப.4.
6. செ.இராசு, செங்குந்தர் வரலாற்று ஆவணங்கள், ப.1.

## ஆட்சி செய்த பகுதிகள்

தொண்டை, பாண்டிய, சோழ, கொங்கு மண்டலங்களைச் செங்குந்தர்கள் ஆட்சி செய்துள்ளார்கள் என்பது இத்தூது நூலினால் அறிய வருகிறது.

### நாட்டாண்மை சபை

பாளையச்சீமைக்குள் இருக்கும் செங்குந்தர்கள் பலர் ஒன்று கூடி நேர்மையாக ஆராய்ந்து தீர்ப்பு வழங்கிய செய்தியை **101–134** வரையுள்ள கண்ணிகள் சுட்டிக் காட்டுகின்றன.

“ பேரியல் நாட்டாண்மை பெரியதனக்காரர்
காரியக்காரர் கர்ணீகர் – ஊரும்
உறவின் முறையாரை யோலைவிட்டுக் கூட்டித்
திறமையாய்த் திட்டமிட்டுச் சேர்ந்து”[7]

என்ற கண்ணிகள் நாட்டாண்மை சபையின் சிறப்பைக் கூறுகின்றன. செங்குந்தர்கள் தமிழகத்தின் பல பகுதிகளை ஆட்சி செய்துள்ளதையும், நெசவுத் தொழிலைக் குலத்தொழிலாக மேற்கொண்டிருந்ததையும் செங்குந்தர் துகில் விடு தூது எடுத்துரைக்கிறது. செங்குந்தர்கள் முருகனின் மேல் தீவிர பக்தி கொண்டவர்கள். ஒவ்வோர் ஆண்டும் முருகன் கோயிலில் சூரசங்காரத் திருவிழாவினையும் சிறப்புற நடைபெறச் செய்துள்ளனர்.

“ தோரா மலாண்டு தொறும் சூரசங்காரத் திருநாள்
சீராய் நடாத்துந் திறலினார்”[8]

என்ற செய்தியும் இத்தூது நூலின் வழி அறியக்கிடக்கிறது.

---

7. பரமானந்த நாவலர், செங்குந்தர் துகில் விடு தூது, ப.18.
8. மேலது , ப.12.

## அட்டவணை, மணியம்

புல்லைக் குமரேசர் பணவிடு தூது, விஜயரகுநாதத் துரைத் தொண்டைமான் ஆட்சியில் அட்டவணை, மணியம் என்ற இரு அரசு அதிகாரிகளை நியமித்திருந்ததைக் கூறுகிறது.

" சட்டம்நின் சட்டம் சகலருக்கும் சம்பளம்நீ
அட்டவணைப் பேச்சு நின் பேச்சலவோ"[9]

" ஊரில் கனமணியம் உத்தியோகம் வந்தது என்றால்
நேரிட்ட சம்பளத்தில் நில்லாமல்"[10]

என வரும் கண்ணிகள் அதிகாரமிக்க, பணபலமிக்க அதிகாரிகளாக அட்டவணை, மணியம் ஆகியோர் திகழ்ந்துள்ளனர் என்பதனை எடுத்துக் காட்டுகிறது.

மிதிலைப் பட்டிக் குழந்தைக் கவிராயர் இயற்றிய மான்விடு தூது, அக்காலத்தில் சிவகங்கை சமஸ்தானத் தலைவராக இருந்த வடுகநாத துரையின் கீழ் மந்திரியாக இருந்த தாண்டவராய பிள்ளையின் பெருமைகளைக் கூறுகிறது. வடுகநாத துரையைப் பற்றிய செய்திகள் சிறிதளவே கிடைக்கின்றன.

## வடுகநாத துரையின் சிறப்புகள்

வடுகநாததுரையின் இயற்பெயர் ராசபுலிமுத்து வடுகநாத பெரியுடையான். இவனுடைய தந்தை சசிவர்ண துரை. வடுகநாத துரை திருக்கோட்டியூர் ஸ்ரீ சௌமிய நாராயணப் பெருமாளின் மீது மிகுந்த பக்தி கொண்டவர். சோழநாட்டில் திரிபுவனம் என்ற பகுதியில் வாழ்ந்த சோமன் என்ற வள்ளலைப் போன்றவர். இராமநாதபுரத்தை ஆட்சி செய்த சேதுபதிக்குத் துணையாக நின்றவர் என்று மான்விடு தூது கண்ணிகள் 125–130 குறிப்பிடுகின்றன.

---

9. ம.வே.பசுபதி (பதி.ஆ.), புல்லைக் குமரேசர் பணவிடு தூது, ப.22.
10. மேலது, ப.23.

## தாண்டவராய பிள்ளையின் பெருமைகள்

வடுகநாத துரையின் பிரதானி தாண்டவராயபிள்ளை ஏராளமான தர்மப் பணிகளைச் செய்துள்ளார். கண்ணிகள் **145–163** வரை தாண்டவராய பிள்ளை செய்த தர்மங்கள் பட்டியல் இடப்பட்டுள்ளன. குன்றக்குடியில் முருகன் கோயிலைப் புதுப்பித்தவர். வையாபுரி என்னும் தடாகமும் படித்துறையும் ஏற்படுத்தியவர். அதனைச் சுற்றி நந்தவனம், வேதம் படிக்கும் மண்டபம் உருவாக்கியவர்.

" நாற்றிசையோர் போற்று வள்ளி நாதருக்கே – தோற்றுதினக்
கட்டளையுந் த்வாதசிக் கட்டளையுந் தைப்பூசக்
கட்டளையுமே நடத்துங் கங்கை குலன்"[11]

என்று கூறுகிறது இப்பாடல்.

முருகனுக்கு நித்தியக் கட்டளை, துவாதசிக் கட்டளை, தைப்பூசக் கட்டளை ஆகியவை நடத்துவதற்கு உதவி செய்தவர் என்பதை இக்கண்ணிகள் எடுத்துரைக்கின்றன. திருப்புத்தூரில் ஸ்ரீ தளீசுவரர், வயிரவமூர்த்தி, பிரான்மலையில் மங்கைபாகர், வயிரவர், திருக்கோட்டியூரில் ஸ்ரீ சௌமிய நாராயணப் பெருமாள் ஆகிய கோயில்களில் மண்டபம், மதில், நந்தவனம், வாகனம், நெய் விளக்கு ஆகியவனவற்றை ஏற்படுத்திக் கொடுத்தவர். பூசைகள் இடைவிடாமல் நடப்பதற்கு உறுதுணையாக இருந்தவர். தென்பாகநேரி அருகில் தடாகம் ஒன்றை உருவாக்கி, அதற்கு முத்து வடுகநாத சமுத்திரம் என்று பெயரிட்டவர். சோழபுரத்தில் திரியம் பகதீர்த்தத்தை உருவாக்கியவர். வைகை நதிக் கரையோரம் உள்ள பரம்பைக்குடியில் குளம், கிணறு வெட்டி தண்ணீர்ப்பந்தல், நந்தவனம், பூஞ்சோலை, மடம், அந்தணர் சத்திரம் ஆகியனவற்றை உண்டாக்கியவர். பசித்து வந்தவர்களுக்கு எல்லாம் கொடிகட்டி

---

**11.** உ.வே.சாமிநாதையரவர்கள் (கு.உ.), மான்விடு தூது, ப.**14.**

அன்னம் கொடுத்துப் பசியாற்றியவர் என்பது போன்ற தர்மங்களைத் தாண்டவராய பிள்ளை செய்ததாக மான்விடு தூது எடுத்துரைக்கிறது.

கோயில் திருப்பணிகளுக்கும் மக்களுக்கும் தாண்டவராயபிள்ளை ஏராளமான தொண்டுகளைச் செய்தமையை இத்தூது சுட்டிக்காட்டுகிறது. மக்கள் துயரப்படாமல், நன்றாக வாழ்ந்து, இறைவனை வழிபட வேண்டும் என்ற வாழ்வியல் தத்துவத்தை உணர்ந்த தாண்டவராய பிள்ளையின் அளப்பரிய செயல்களையும் செய்த தர்மங்களையும் உணருவதற்கு மான்விடு தூது வழிகோலுகிறது.

## பண்பாட்டுக்கூறுகள்

சூழ்நிலைக்கேற்ப மக்களின் வாழ்க்கை அமைதல் இயல்பாகும். எனவே மக்களின் வாழ்க்கை முறையிலும் மாற்றங்கள் இருந்தன. தூது இலக்கியங்களும், அக்காலச் சமுதாயத்தின் நிலையைத் தெள்ளத் தெளிவாக எடுத்துரைக்கின்றன. “கிராமம், நகரம், மாவட்டம், நாடு அல்லது அதற்கு மேற்பட்ட நிலப்பரப்புடைய பகுதியில் அலைந்து, பொதுவான வாழ்க்கையில் ஈடுபட்டிருக்கும் மக்கள் கூட்டம் சமுதாயம்”[12], “மனித வாழ்வோடு பண்பாடு பிணைந்த நாளே சமுதாயம் உருவான பெருநாள்”[13], என்பர். நல்லவையும், கெட்டவையும் சமுதாயத்தில் பரவலாக இருந்திருக்கின்ற அக்காலச்சூழலைச் தூது நூல்கள் உள்ளடக்கியுள்ளன.

## சமூகம்

வறுமை நிலை காரணமாகப் போலியாக மருத்துவம் பார்த்துள்ளனர். இரசவாதம் செய்துள்ளனர். பேயோட்டியுள்ளனர். கழைக்கூத்து ஆடியுள்ளனர். பணத்திற்காகப் பல்வேறு வழிகளில் இறங்கி பொருள் சம்பாதித்ததைப் பணவிடு தூது நூல்கள் குறிப்பிடுகின்றன.

---

12. ஜெ.நாராயணன் (த.ஆ.), சமூகவியலின் அடிப்படைக் கோட்பாடுகள், ப.45.
13. அ.மு.பரமசிவானந்தன், சமுதாயமும் பண்பாடும், ப.27.

## போலி மருத்துவர்கள்

உடம்பில் நரம்பு துடிப்பதனை வைத்து வாதநோய், பித்தம், கபக்கூறு உள்ளது என்று நோயை முழுமையாக அறிந்த மருத்துவர்களைப் போல செயல்பட்டுள்ளனர். இருமினால் காச நோய், முகம் வெளிறி இருந்தால் இரத்தச்சோகை, மூக்கில் நீர் ஒழுகினால் மூக்கடைப்பு நோய் என்றும் நோய்களை மிகைப்படுத்திக் கூறியுள்ளனர்.

" போக்கு மிருமலையும் பொல்லா க்ஷயமென்றே
பார்க்குமுக சோகையைப் பாண்டுவென்று – மூக்கு
வழிச்சலைப் பீனிசமென்றும் வயிற்றுக்
கழிச்சலைக் கிருணியென்றுங் கண்டு"[14]

என்னும் கண்ணிகள் மக்களை ஏமாற்றியுள்ளதை எடுத்துக் காட்டுகின்றன. நோய்களுக்கான பச்சிலை மருந்துகளையும் தயார் செய்து உருண்டைகளாக்கி வழங்கியுள்ளனர். வெறும் வயிற்றில் மருந்து சாப்பிட்டுக் கைகால் வீங்கி விட்டால் நீர் முள்ளிச் சாம்பலைச் சுட்டுத் தடவினால் குணமாகி விடும் என்று ஆலோசனைகளும் தந்துள்ளனர். தம்முடைய வைத்தியத்தால் பல கோடி பேரைக் கொன்றிருந்தாலும் கூற்றுவன் வாயில் சென்ற உயிரை மீட்டெடுப்போம் என்று மக்களை நம்ப வைத்து ஏமாற்றிப் பணம் சம்பாதித்த மக்கள் சமூகத்தில் இருந்துள்ளதை இப்பணவிடு தூது நூல் எடுத்தியம்புகிறது.

## செம்பில் ஈயம் கலந்து வெண்கலம் என்று கூறுதல்

ஈயம், செம்புப் பாத்திரங்களை விட வெண்கலப் பாத்திரங்கள் விலை அதிகம். எனவே, அதிகமாகப் பணம் சேர்ப்பதற்காகப் போலியாக வெண்கலப் பொருள்களை உருவாக்கி மக்களை ஏமாற்றியுள்ளனர். எட்டுப்பலம் நிறையளவு கொண்ட செம்பில் இரண்டு பலம் ஈயம் கலந்து உருக்கி வெண்கலம் போன்று

---

14. இரா.நிர்மலாதேவி (பதி.ஆ.), முத்துவிசயரகுநாத சேதுபதி மீது பாடிய பணவிடு தூது, ப.86.

மாற்றியுள்ளனர். பின்னர் அதனைக் கொண்டு, வெண்கல வட்டி கலம், குத்துவிளக்கு, செம்பு, கும்பாக்கள் போன்றவற்றை உருவாக்கி விற்றுள்ளனர். இதனை,

" எட்டுப் பலச்செம்பில் ஈயம் இரண்டு பலம்
விட்டு உருக்கி வெங்கலமாய் மெய்ப்பித்து – வட்டிகலம்

குத்துவிளக்கு ஏற்ற செம்பு கும்பாக்களும் சமைத்திட்டு
அத்தவிலை பணம்சொக்கம் அஞ்சுஎன்றும் – வித்து"[15]

என்ற கண்ணிகள் மெய்ப்படுத்துகிறது.

## நகை ஏமாற்றும் வழக்கம்

பொற்கொல்லர்கள் தங்களிடம் நகை செய்பவர்களைப் பலவிதங்களில் ஏமாற்றியுள்ளனர். பழைய நகைகளைக் கொண்டுவந்து கொடுக்கும் போது அதிலிருந்து சிறிது எடுத்துக் கொண்டுள்ளனர். நகை கொண்டு வருபவர்களின் முன்னே நிறுத்து உருக்கி, அவர்களுக்குத் தெரியாமல் நகை களவாடியுள்ளனர்.

" தட்டார் குடிவழியில் சார்ந்து பழநகையைத்
தொட்டார்போல் வாங்கிச் சிறிது எடுத்துக் கட்டணத்தைப்

போட்டு நகைமுடித்துப் பூட்டகமாய்க் கொடுத்து
நாட்டுகணக்காளி நகைவந்தால் – ஈட்டுமச்சம்

அங்காய் நறுக்கி நிறுத்து அங்கவர் முன்னே உருக்கிக்
கங்காணத்தில் சிறிது கைபற்றி....."[16]

என்றுவரும் கண்ணிகள், மக்களிடையே நகை ஏமாற்றிப்பறிக்கும் பொற்கொல்லர்களின் நிலையைப் பறைசாற்றுகின்றனர்.

---

15. ம.வே.பசுபதி (பதி.ஆ.), புல்லைக் குமரேசர் பணவிடு தூது, ப.28.
16. மேலது , ப.29.

## இரசவாதம் செய்து ஏமாற்றுதல்

இரும்பையும் பொன்னாக்கித் தருவேன் என்று மக்களை ஏமாற்றிய பொய் இரசவாதிகள் சமுதாயத்தில் இருந்துள்ளனர் என்பதைப் பணவிடு தூது நூல் சுட்டிக்காட்டுகின்றது. பகல் வேளையில் மருந்துப் பொருள்களை அரைத்து, அதனுடன் பச்சிலைச் சாறு கலந்து சிறுகுடத்தில் அடைத்துக் காய வைத்துள்ளனர். பின்பு மருந்து அரைக்கும் கற்பாத்திரத்தில் இட்டு நன்கு அரைத்து நிழலில் காய வைத்துள்ளனர். கடலில் வாழும் உயிருள்ள சங்கின் வாயைப் பிளந்து காய வைத்த மருந்துச் சாற்றினைக் குடிக்க வைத்துள்ளனர். பின்னர் அதனைச்சுற்றி மண்பூசி, நூறு தடவை வெய்யிலிலோ, நெருப்பிலோ இட்டுச் சுட்டெடுத்துப் பக்குவப்படுத்தியுள்ளனர். **203–216** வரையுள்ள கண்ணிகள் இச்செய்திகளைப் பேசுகின்றன.

“ பகலு மரைத்தரைத்துப் பாஷாணங் கூட்டி
மிகலுங் குறைவும் விலக்கிப் – புகல் விலக்கிப்

பார்த்துப் பிடுங்கி வந்த பச்சிலையைக் கூட்டியொன்றாய்ச்
சேர்த்துப் பிழிந்து சிறுகுடத்தில் – வார்த்தடைத்துக்

காயவைத்துச் சுத்தியிலே கட்டாக விட்டரைத்துச்
சாயவைத்து நாளிலே சற்றிறக்கிப் – பாயுந்

தடித்தரசங் கூட்டியுயிர்ச் சங்கின் கழுத்தைப்
பிடித்திமுத்து வாயைப் பிளந்து – குடிக்க விட்டு

மண்கட்டி நூறுபிடம் வைத்தெரித்துச் சுட்டெடுத்து
.....................................................”[17]

இரசவாதம் செய்ய முற்படுகின்றனர்.

இவ்வாறு எடுக்கப்பட்ட எட்டுப்பங்கு கலவையுடன் ஒரு பங்கு தங்கம் சேர்த்துச் சமமாக்கிச் செம்பும் இரும்பும் கலந்த பாத்திரத்தில் இட்டு மூடித் தந்துள்ளனர். நாளடைவில் அக்கலவையானது நிறம் மாற, மக்கள் மிகுந்த மகிழ்ச்சியுடன் தங்கம் கிடைக்கப் போகிறது என்று எண்ணினர். அச்செம்பிற்குத் தங்கம், மஞ்சள் இட்டு, நீரால் பூசி விழுந்து வழிபட்டுள்ளனர். அப்பாத்திரத்தைத் தொட்டு கண்ணில் ஒற்றிக் கொண்டனர். குறிப்பிட்ட காலத்தில், சுத்தியலால் அடித்து அச்செம்பினைத் திறக்க உள்ளே தங்கம் இல்லாததைக் கண்டு ஏமாற்றம் அடைந்து அழுது புலம்பியுள்ளனர். அவ்வாறு அழுகின்றவர்களிடம் மீண்டும் எட்டுப்பங்கு அல்லது ஏழில் ஒரு பங்கு தங்கம் சேர்த்தால் இரும்பானது தங்கமாக மாறிவிடும் என்று நம்ப வைத்து, மறுபடியும் பணம், பொருள் ஆகியவற்றைப் பறித்து ஏமாற்றியுள்ளதைப் பணவிடுதூது நூல் காட்டுகிறது. இரசவாதம் செய்யும் வழக்கம் இருந்ததையும், அதனை வைத்து மக்களை ஏமாற்றும் ஒரு பிரிவினர் சமூகத்தில் இருந்ததையும் இச்செய்திகள் புலப்படுத்துகின்றன.

## பேயை ஏவிப் பணம் பறித்தல்

பணத்திற்காகப் பேய்பிடிக்காதவர்களையும் பேய் பிடித்துள்ளது என்று கூறி பேயோட்டும் பொய்யான பேயோட்டிகளைப் பணவிடு தூது நூல்கள் கூறுகின்றன.

“ பார்த்து மகாபூதம் இது பாவாடை வீரப்பன்
ஏத்ததொரு மின்னடியான் என்றுரைத்து – தீர்த்தமது

தன்னை முடிமேல் தெளித்துச் சாம்பிராணியும் புகைத்து
முன்னம் உடுக்கு முழக்கி வைத்து – பின்னுமுறம்

17. இரா.நிர்மலா தேவி (பதி.ஆ.), முத்து விசயரகுநாத சேதுபதி மீது பாடிய பணவிடு தூது, ப.87.

தன்னில் விபூதி தனைக் கொண்டு வா என்று
சின்னஞ் சிறுகச் சிறந்தெழுதி”[18]

பேயோட்ட முயற்சி செய்துள்ளனர்.

கடினத்தன்மை கொண்ட கொடிய பேய் என்று கூறி தானே பேயை ஏவிவிட்டு பேய்பிடிக்கச் செய்து அழ வைத்துள்ளனர். இதனால் பேய்பிடித்தவர்களின் குணம் மாறுகின்றது. கணவன், மகன் என்ற வேறுபாடு தெரியாமல் முறைத்துப் பார்த்து, சிரித்து, அழுது, பற்களை நறநறவென்றே கடித்து, வாய்குழறி சீறியுள்ளனர்.

பின்னர் பேயை விரட்ட வேண்டி முறத்திலே சாம்பல் பரப்பி, பேனைப் போல சிறியதாகவும் மீனைப் போல பெரியதாகவும் மந்திரங்கள் எழுதியுள்ளனர். ஒரு படத்தில் சூலம் வரைந்து வைத்துள்ளனர்.

“அம்மென்றும் ரம்மென்றும் லம்மென்றும் வம்மென்றும்
அம்மென்று முள்ளே யடைத்தெழுதி – உம்பட்டுச்
சாடு சாடென்றுரைத்துச் சாதி னையுஞ் சாத்திரமுங்
கூடும் பலமுங் குறித்துரைத்து – நீடு
வரம்பெடுத்துப் போக மயிரவிழ்த்து மோதிப்
பிரம்பெடுத்து மாறிப் பிடித்துத் – தரம் பிரித்துப்
பேரைச் சொல்லென்றடித்துப் பேசி வித்துத் தன்பேயைத்
தூரச் செல்லென்று துரத்தி .....”[19]

என்ற கண்ணிகளில் பேயோட்டும் முறை கூறப்பட்டுள்ளதை அறிய முடிகிறது. பேயோட்டுபவர், தான் செய்த தீரச் செயல்களையெல்லாம் கூறியும் பேய் ஓடாவிட்டால் வேறு உபாயத்தைச் கையாண்டுள்ளனர். முடியை அவிழ்த்து மோதி, உன் பேரைச் சொல் என்று பிரம்பால் அடித்துத் துரத்திக் காசு பறித்துள்ளனர்.

---

18. ம.வே.பசுபதி (பதி.ஆ.), சின்னவன்னியனார் பணவிடு தூது, ப.86.
19 இரா.நிர்மலா தேவி (பதி.ஆ.), முத்து விசயரகுநாத சேதுபதி மீது பாடிய பணவிடு தூது, ப.89.

பேயோட்டும் மந்திரவாதிகள் சமூகத்தில் இருந்துள்ளனர் என்ற செய்தியை இப்பணவிடு தூது நூல்கள் சித்திரிக்கின்றன.

## தாசிகள்

சமுதாயத்தில் தாசிகளும் இருந்துள்ளனர் என்பதனை அறிய முடிகின்றது. அவர்கள் தங்களை அலங்கரித்துக் கொண்டு தம்முடைய பிழைப்பிற்காகப் பொருள் தேடியுள்ளனர்.

" உன்னைப் பிரிந்திரேன் உன்ஆணை என்று சொல்லிப்
பொன்னைப் பறித்தபின்பு போகவிட்டு – பின்ஒருவர்
தன்னை வரவழைக்கும் தன்மையால்...."[20]

என்று கூறுவதை நோக்கும் பொழுது, பொருளுக்காகப் பெண்கள் இந்த இழிநிலையைத் தேர்ந்தெடுத்திருக்கலாம் அல்லது சமுதாயத்தினரால் இந்த இழிநிலைக்கு ஆளாக்கப்பட்டிருக்கலாம் என்று கருத இடமளிக்கிறது. விறலி விடு தூது நூல்களைப் போல தாசிகளின் குல முறைகள் பணவிடு தூதில் இடம்பெறவில்லை. சிற்சில கண்ணிகளில் மட்டுமே தாசிகளைப் பற்றிய செய்திகள் காணப்படுகின்றன.

## பணத்திற்காகப் புராணக் கதைகள் கூறுதல்

காவி உடை உடுத்தி, சடை முடித்து, திருநீறு சாற்றித் தம் சீடர்கள் சூழ சிவபெருமான் முன் அமர்ந்து புராணக் கதைகள் கூறிப் பணம் பெற்ற நிலையைப் பணவிடு தூது எடுத்துரைக்கிறது.

" சடைமுடித்து வெண்ணீறு சாற்றி வரும் காவி
உடை உடுத்திச் சிட்டருடன் சூழ – விடை எடுத்த
தம்பிரான் என்னத் தனாதிபர்முன் சென்றிருந்து
எம்பிரான் காக்கஎன மொழிந்து – சொம்புடனே

20 ம.வே.பசுபதி (பதி.ஆ.), சின்ன வன்னியனார் பணவிடு தூது, ப.82.

பூசுநீறு போற்றிப் புராணகதை சொல்லிடுவார்
நேசமெல்லாம் நின்னுடைய நேசமே"[21]

என்று பணத்தின் மேல் ஆசைவைத்துப் புராணக் கதைகள் கூறும் வழக்கம் இருந்துள்ளதை அறிய முடிகிறது.

மருத்துவர்கள், பொய் விற்பனையாளர்கள், நகையை வாங்கி ஏமாற்றுபவர்கள், இரசவாதிகள், பேயோட்டும் மந்திரவாதிகள், தாசியர், புராணக்கதை கூறுபவர்கள் ஆகியோர் பொருள் சேர்த்தல் ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டு செயல்பட்டுள்ளதைப் பணவிடு தூது நூல்கள் சுட்டுகின்றன. சாதாரண மக்களின் அடித்தட்டு நிலை மற்றும் சமுதாயத்தில் புரையோடிக் கிடக்கும் அழுக்குகளை வெளிப்படுத்துவதாக இத்தூது நூல்கள் அமைந்துள்ளன. விறலி விடு தூது நூல்கள், பணவிடு தூது நூல்களைத் தவிர இவ்வாறான எதிர்மறையான செய்திகள் பிற தூது நூல்களில் காணக்கிடைக்கவில்லை. இதனை நோக்கும் பொழுது சமுதாயத்தில் நடக்கும் அவலங்களை வெளிப்படுத்துவதற்காகப் பணவிடு தூது நூல்கள் எழுதப்பட்டனவோ என்று கருத முடிகிறது.

## அடிமைகள் முறை

பழங்காலத்தில் அடிமைகள் இருந்துள்ளனர் என்பதனை இலக்கியங்களின் வழி அறிந்து கொள்ள முடிகின்றது. தமிழகத்திலும் அடிமைகள் இருந்துள்ளனர். அடிமைகளுக்குப் பல உரிமைகள் மறுக்கப்பட்டதையும் இலக்கியங்கள் உணர்த்துகின்றன.

" தமிழகத்தில் அடிமைகள் இருந்ததும், விலங்குகளைப் போல்
அவர்களுக்கு சூட்டுக்குறி இடப்பட்டதும், பொருள்களைப் போல
விற்கப்பட்டதும், வாங்கப்பட்டதும், தானமளிக்கப்பட்டதும்,

---

21. ம.வே.பசுபதி (பதி.ஆ.), கவிராயர் பணவிடு தூது., ப.48.

சீதனமாகக் கொடுக்கப்பட்டதும், ஆள்பவர்களின் துணையுடன்
அடக்கி ஒடுக்கப்பட்டதும் வரலாற்று ரீதியில் மறுக்கவோ,
மறைக்கவோ முடியாத உண்மைகளாகும்”[22]

என்ற கருத்து ஈண்டு ஒப்புநோக்கத்தக்கது.

கொத்தடிமை முறை வழக்கத்தில் இருந்ததை,

“ மூழ்கி விடைபெற்று முன்னெமது – தாழ்குடியைக்
கொத்தடிமை கொண்ட குருசாது நந்தியமர்”[23]

என்று எடுத்துரைக்கிறது மயில் விடு தூது. தாழ்ந்த நிலையில் இருந்தவர்களைக் காலம் காலமாக அடிமைத் தொழிலில் ஈடுபடுத்திய அவல நிலையை இத்தூது நூல் சித்திரிக்கிறது.

## இசைக்கலை

இசைக்கருவிகளை இசைப்பதில் தேர்ச்சி பெற்ற கலைஞர்கள் இருந்ததாகத் தூது நூல்கள் எடுத்துக் காட்டுகின்றன. தென்றல் விடு தூது காகளம் என்னும் இசைக்கருவியைப் பற்றிக் குறிப்பிடுகிறது.

“ காளத்தொனி நீ கடத்திவிடாயேற்சக்ர
வாளத்தையெல்லாம் போய் மண்டுமோ”[24]

“இசைக்கு உரிய ஓசைகள் ஐந்து பொருள்களில் உண்டாகின்றன. அப்பொருள்கள் தோல் கருவி, துளைக்கருவி, நரம்புக் கருவி, கஞ்சக்கருவி, மிடறு (கழுத்து) என்பன”[25] என்று அறிஞரின் கூற்று இசைக்கருவிகளை வகைப்படுத்திக் காட்டுகின்றது.

“ கொட்டுநகரா பேரி கொண்டலின் வாய் – விட்டதிரத்
தண்டகந் தாங்குந் தகுணியுங் கோடிணையும்

22. ஆ.சிவசுப்பிரமணியன், அடிமை முறையும் தமிழகமும், ப.51.
23. கோ.ந.முத்துக்குமாரசுவாமி (பதி.ஆ.), பழனியாண்டவர் மயில்விடு தூது, ப.27.
24. உ.வே.சாமிநாதையரவர்கள் (கு.உ.), ஸ்ரீபத்மகிரிநாதர் தென்றல் விடு தூது, ப.9.
25. மயிலை சீனி வேங்கடசாமி, தமிழர்வளர்த்த அழகுக்கலைகள், ப.108.

தொண்டகமுஞ் சல்லரியுந் துந்துமியும் – விண்டதொனி
மத்தள தாளவகையுங் கிடுபிடியும்
சொன்னடக்கை யோரேந்திச் சூழ்ந்து வர”[26]

நகரா, பேரி, கொட்டு, தகுணி என்று சொல்லப்படும் தோற்கருவி, துந்துமி, சல்லரி, மத்தளம், கிடுபிடி, மணிக்கொம்பு, தம்புருவீணை, டக்கை போன்ற வாத்தியக் கருவிகள் பழக்கத்தில் இருந்ததை மான்விடு தூது எடுத்துரைக்கிறது.

“...........................................படகம்
பதலை முருகு பணவ முழவம்..”[27] என்ற இசைக்கருவிகளையும்

“ காந்தாரம் பாடு கனலிற் றழல்கின்ற
.......................................................................................
சாதாரி யோது தமியே னிறையோடும்
தாண்டகம் பாடு தமியேனை விட்டங்கே
.......................................................................................
கவுசிகம்பாடு கடிதடமே னில்லாக்
.......................................................................................
ஆர்நட்டபாடை யறைதி யெனக்கிங்காம்
.......................................................................................
சீகாமரம்பாடு.....”[28]

என இசைபற்றிய குறிப்புக்களையும் வண்டுவிடுதூது சுட்டிக்காட்டுகிறது. இப்பகுதியில் ஒவ்வொரு பண்களின் பெயரும் இருபொருள்பட விளக்கப்படுகின்றன. காந்தாரம், சாதாரி, தாண்டகம், கவுசிகம், சீகாமரம், சிகண்டி, காம்போதி, நைவளம், புறநீர்மை, பஞ்சுரம், செவ்வழி, கொல்லி, விளரி, நேர்திறம், பாலை, குறிஞ்சி போன்ற பண்வகைகள் இறைவனின் முன்பாக இசைக்கப்படும் வழக்கம் இருந்துள்ளதை வண்டுவிடு தூது எடுத்துக்காட்டுகிறது.

பஞ்சவன்னத் தூது நூலில் நாட்டை, சாவேரி, மோகனம், தோடி, எதுகுலாம் போதி, செஞ்சுருட்டி, புன்னாகவராளி, நாகநாதக்கிரியை ஆகிய இராகங்கள்

---

26. உ.வே.சாமிநாதையரவர்கள் (கு.உ.), மிதிலைப்பட்டிக் குழந்தைக்கவிராயர் இயற்றிய மான்விடு தூது, ப.21.
27. தி.சங்குப்புலவர் (வி.உ.), கச்சி ஆனந்தருத்திரேசர் வண்டு விடு தூது, ப. 32.
28. மேலது, பக்.46–48.

இடம் பெற்றுள்ளன. சம்பை, ரூபகம், திரிபுடை, ஆதி, திசுரம் ஆகிய தாள வகைகளும் நூலில் காணப்படுகின்றன. ஒவ்வொரு பாடலின் மேல் இராக, தாள வகைகள் குறிப்பிடப்பட்டுள்ளன. தூது இலக்கியங்கள் வழி தோற்கருவிகள், நரம்புக்கருவிகள், துளைக்கருவிகள் இசைக்கப்பட்டதை அறிய முடிகின்றது. பலவித பண்கள், இராகங்கள், தாளங்களில் பாடல்கள் பாடப்பட்டுள்ளதை அறிய வருகின்றது.

## வாணிபம்

பழந்தமிழகத்தில் வாணிபம் சிறப்பாக இருந்ததை இலக்கியங்கள் வாயிலாக அறிய முடிகின்றது. பிற நாடுகளோடும் தமிழர்கள் வாணிபத் தொடர்பு வைத்திருந்ததைச் செங்குந்தர் துகில்விடு தூது எடுத்துக் காட்டுகின்றது.

“ எட்டுத் திசையிலும் போய் எட்டும் வியாபாரத்தால்
நட்டமொடு லாபமுமே நாட்டி வைப்பாய்! – அட்டதிக்கில்
மங்களமாங் கிட்டாம ரலக்கர் முதல் தீவு
சிங்களவங்காளமுதல் சீமையில்போய் – தங்கமணி
கப்பல்வந்து சேரந்து கரைதுறையில் வர்த்தகருக்
கொப்பந்தமாயெழுது மோலையுடன் – இப்புவியில்
எங்கெங்கு முள்ளஎழில் தொழில் செய்வர்த்தகர்க்கு”[29]

சிங்களம், வங்காளம் போன்ற பகுதிகளுடன் வாணிபம் நடைபெற்றுள்ளது. கப்பலில் தங்கம், மரகதப் பொருள்கள் வந்து இறங்கியுள்ளன. செங்குந்தர்கள் தாங்கள் நெசவு செய்த ஆடைகளை ஏற்றுமதியும் செய்துள்ளனர். அதேபோல, இறக்குமதியும் நடந்துள்ளது. ஏற்றுமதியும் இறக்குமதியும் ஒருசேர நடக்கின்ற துறைமுகத்தில் வணிக அடிப்படையில் ஓலையில் ஒப்பந்தமும் எழுதியுள்ளதைச் செங்குந்தர் துகில்விடு தூது சுட்டிக்காட்டுகிறது.

29. பரமானந்த நாவலர், செங்குந்தர் துகில்விடு தூது, பக்.23–24.

## சமயச் சடங்குகள்

தூது இலக்கியங்களில் சில நூல்கள் மட்டும் வழக்கத்தில் இருந்த சமயம் சார்ந்த சடங்குகளைச் சுட்டிக் செல்கின்றன. மந்திரங்கள், திருப்பள்ளியெழுச்சிப் பாடுதல், கொடி ஏற்றுதல், இறைவனை நீராட அழைத்துச் செல்லுதல், நீராட்டுதல், ஆலத்தி எடுத்தல், பவனி வருதல், பூசைக்குரிய பொருள்கள் போன்றவற்றைக் காண முடிகின்றது.

## மந்திரங்கள் மற்றும் சின்னங்கள்

மக்கள் இயற்கையுடன் இணைந்தே அக்காலத்தில் வாழ்ந்திருந்தனர். புயல், கடல்கோள், பூகம்பம் போன்ற இயற்கைச் சீற்றங்களிலிருந்து தங்களைக் காப்பாற்றிக் கொள்ள அவர்களால் முடியவில்லை. எனவே, தங்களுக்கும் மேலாக, ஏதோ ஒரு சக்தி இருக்கிறது என்று நம்பினர். அச்சக்தியைத் தங்களுடன் இணைப்பதற்காக அவர்களால் உச்சரிக்கப்பட்ட ஒரு கூறு தான், ஒரு செயல்தான் மந்திரம் என்று உணர முடிகின்றது.

தூது இலக்கியங்கள் ஐந்தெழுத்து மந்திரத்தையும் எட்டெழுத்து மந்திரத்தையும் இன்னபிற அட்சரங்களையும் கூறுகின்றன.

" வஞ்செழுத்தி னுள்ளீடறிவித்தா னஞ்செழுத்தை
நெஞ்செழுத்தி நேய மயலாக்கி – யஞ்செழுத்தை
யுச்சரிக்குங் கேண்மை யுணர்த்தி "[30]

" ........................................... எட்டெழுத்தாந்
பிஞ்செழுத்தாய் நையும் பிரமலிபியெனும் பேர்
அஞ்செழுத்தை மூன்றெழுத்தாக்குவோன்"[31]

என்றும் ஐந்தெழுத்து, எட்டெழுத்து மந்திரங்களை நெஞ்சுவிடு தூது, அழகர் கிள்ளைவிடு தூது ஆகியன குறிப்பிடுகின்றன.

---

30. உமாபதி சிவாச்சாரியார், நெஞ்சுவிடு தூது, ப.13.
31. தி.சங்குப்புலவர் (வி.உ.), திருமாலிருஞ்சோலைமலை அழகர்கிள்ளை விடு தூது, ப.47.

நமசிவாய என்னும் ஐந்தெழுத்து மந்திரம் சில அறிவியல் செய்திகளை உள்ளடக்கியதாக உள்ளது. பஞ்சபூதங்கள் நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் என்னும் ஐந்தும் ஆகும். பஞ்சபூதங்களை உணர்த்துவதற்காகவே முன்னோர்கள் 'நமசிவாய' என்னும் மந்திரத்தை கூறியிருத்தல் வேண்டும்.

பஞ்சபூதங்களால் ஒருங்கிணைந்தது தான் உடல். இவ்வுடலையே 'கோயில்' என்ற சிந்தனையோடு முன்னோர்கள் வழிபட்டிருக்க வேண்டும். ஏனெனில், இயற்கையோடு ஒன்றிய வாழ்க்கை முறையைக் கொண்டவர்கள் அக்கால மக்கள். எனவே, உயிர் இருக்கின்ற உடலையும் பஞ்சபூதங்களாக வணங்கித் தொழுதிருக்க வேண்டும் என்ற கருத்துப் புலப்படுகின்றது. மாணிக்கநாயகர், "ந.ம.சி.வ.ய. என்னும் எழுத்துக்களைப் பஞ்சபூதங்களை உணர்த்தும் குறியீடு என்றே குறிப்பிடுகின்றார்."[32] சமயங்களைப் புகுத்துவதற்கும் இம்மந்திரங்களை அடிப்படையாகக் கொண்டிருந்திருக்கலாம்.

சமயக் குறியீடுகளாகச் சின்னங்கள் தரித்திருப்பதையும், சமய வளர்ச்சியின் அறிகுறி என்றே கொள்ள வேண்டியுள்ளது. நாகரிகம் வளர, வளர பெற்ற அறிவின் பயனாக, சமயங்களை வளர்க்க எண்ணியிருப்பர். தாங்கள் வணங்கும் தெய்வத்தைக் குறிப்பதற்காக, தங்களை வேறுபடுத்திக் காட்டுவதற்காகச் சில சின்னங்களைத் தரித்திருக்கலாம். நாளடைவில், இச்சின்னங்களே சமயங்களை வேறுபடுத்திக் காட்டி இருக்கலாம் என்று எண்ணத் தோன்றுகிறது.

" படந்தனில் கைத்தமணிப்பாயன் – தொடர்ந்தவினை
முட்டறுக்குந் தன்னாம முன்னித் திருநாமம்
இட்டவருக்கீவோன் இகபரங்கள்"[33]

---

32. பா.வே.மாணிக்க நாயகர், உயிர் வளர்ச்சியிற் கண்ட இறை வடிவம், ப.66.
33. தி.சங்குப்புலவர் (வி.உ.), திருமாலிருஞ்சோலைமலை அழகர்கிள்ளை விடு தூது, ப.47.

அழகர் பெருமானின் திருமண் குறிகளை இட்டால் தொடர்கின்ற வினைகள் முழுமையும் நீங்குவதோடு, இம்மை, மறுமை இன்பங்கள் கிடைக்கும் என்று அழகர் கிள்ளைவிடு தூது கூறுகிறது. காலம் செல்லச் செல்ல 'ஓம் நமசிவாய' என்பது சைவ சமயத்தையும், 'ஓம் நாராயணாய நம' என்பது வைணவ சமயத்தைக் குறிக்கும் குலக் குறியீடாக மாறியிருத்தல் வேண்டும் என்று சிந்திக்க இடமளிக்கிறது.

## திருப்பள்ளியெழுச்சிப் பாடுதல்

மதுரைச் சொக்கநாதர் கோயிலில் சிவபெருமானை வேதாகமங்களை ஓதி புரோகிதர்கள், பள்ளியெழுந்தருளச் செய்துள்ளதைத் தமிழ்விடு தூது சுட்டுகிறது.

" கோல விசிறி குளிர்ந்தணுகக் – காலைத்
...........................................................
போற்றுவாய் நீயும் புரோகிதரை முன்னனுப்பி
...........................................................
மூவர் கவியே முதலாங் கவியைந்தும்
மூவராய் நின்றார்தம் முன்னோதி"[34]

துயில் எழச் செய்துள்ளனர். தேவாரம், திருவாசகம், திருவிசைப்பா, திருப்பல்லாண்டு, பெரியபுராணம் ஆகியவற்றில் உள்ள துதிப் பாடல்களைப் புரோகிதர்கள் பாடி இறைவனை எழுப்பியுள்ளனர்.

திருநறையூரில் வீற்றிருக்கும் திருமால் காலையில் திருப்பள்ளி எழுந்தருளும் போது, நம்மாழ்வாரின் திருவாய்மொழி, திருமங்கையாழ்வாரின் திருமொழி மற்றும் வேதங்களும் ஓதப்படும் வழக்கங்கள் இருந்துள்ளதை மேகவிடு தூது குறிப்பிடுகிறது.

---

34. தி.சங்குப்புலவர் (வி.உ.), மதுரைச் சொக்கநாதர் தமிழ் விடு தூது, பக்.36–37.

" தொண்டர் குழாமுந் தொழுதேத்தப் – பண்டைத்
திருவாய்மொழியுந் திருமொழியும் வேதாத்
தருவாய் மொழியுந் தழைப்ப"[35]

ஓதி திருமாலைப் பள்ளியெழுந்தருளச் செய்துள்ளதைக் காண முடிகிறது.

## கொடி ஏற்றுதல்

ஒரு நிகழ்ச்சி நடக்கப் போவதை அறிவிக்கக் கொடி கட்டும் முறை வழக்கத்தில் இருந்துள்ளதை அறிய முடிகிறது. அழகர் வீற்றிருக்கும் திருமாலிருஞ்சோலையைக் குறிப்பிடும் போது கொடிமரம் பற்றிய செய்தியை அழகர் கிள்ளைவிடு தூது தருகிறது.

" இந்திரவிமானம் இதுஎன்றும் – மந்த்ரவிரு
துக்கொடியேறு துசத்தம்பம்"[36]

கொடியேற்றும் தூண் ஒன்றில் மந்திரங்கள் கூறி கொடியேற்றியுள்ளனர்.

## இறைவனை நீராடும் மண்டபத்திற்கு அழைத்துச் செல்லுதல்

இறைவன் நீராடுவதற்கென்றே தனியே நீராடும் மண்டபங்கள் அமைக்கும் வழக்கம் இருந்துள்ளன. விலைமதிக்க முடியாத பொருள்களால் அம்மண்டபத்தை அலங்கரித்துள்ளனர்.

பலவகை மணிமாலைகள், பழமாலைகள், பூமாலைகள், பசும் பொன்னால் செய்த அழகிய மாலைகளைத் தொங்கவிட்டுள்ளனர். கண்ணாடிகளையும் வெண்சாமரைகளையும் அசையும்படி தூக்கிக் கட்டியுள்ளனர். ஒளி வீசுகின்ற பட்டுகள், சித்திரம் வரைந்த பட்டுகளை நெருங்க மேலே கட்டி, கீழே பசுமையான இரத்தினக் கம்பளத்தை விரித்து வைத்துள்ளனர். சுவர் முழுவதும் கண்ணாடிகள், சித்திரப் பாவைகள், மணிவிளக்குகள், பல நிறமுடைய பூவேலைப்பாடமைந்த பட்டுகள் பதியும்படி அமைத்துள்ளனர். மண்டபத்தில் உள்ள தூண்களுக்குத் தூசி

---

35. டி.கே.இராமானுஜ ஐயங்கார், (உ.ஆ.), திருநறையூர் நம்பி மேகவிடு தூது, ப.14.
36. தி.சங்குப்புலவர் (வி.உ.), திருமாலிருஞ்சோலைமலை அழகர்கிள்ளை விடு தூது, ப.45.

படியாமல் இருக்க உறைகள் இட்டுள்ளனர். அத்தூண்களின் அருகில் பூப்பந்தல் இட்டு வாழைக்குலை, கமுகங்குலை, வேறு பல கனி வகைகளும் கட்டியுள்ளனர்.

“மதவுவண்ணத் தூசு வயக்கிக் – கதிர்ப்பசும்பொற்
சுண்ணமுந் தாதுந் தொகுவிரையும் பன்மணியும்
கண்ணகு பூவுங் கமழ்சாந்தும் – வெண்ணிறத்த
வான்பொரியு மச்சுதமும் வண்கருகுங் குங்குமமும்
நானநறு நீறு நனி சிந்தி”[37]

பொன்னின் பொடியும் மகரந்தப் பொடியும் கலந்த வாசனைப்பொடி, தேன்நிறைந்த பூ, சந்தனம், வெள்ளைநிறமுடைய பெரிய நெற்பொரி, அறுகும் அரிசியும் சேர்ந்த பொடி, வெண் சிறு கடுகு, குங்குமப்பொடி, புனுகு, குளிர்ந்த நீர் ஆகியனவற்றை மண்டபத்தில் பரப்பியிருந்தனர்.

நீளமான துகிற்கொடிகளைக் கட்டி, முத்துத் தோரணங்களை நாட்டியுள்ளனர். சுவற்றில் பூண் அணிந்த அழகிய பெண்கள் நடனமாடுவது போன்று சித்திரங்கள் தீட்டப்பட்டிருந்தன. தரையில் நடை பாவாடை விரித்து வைத்து இறைவன் நீராட வரும் பொழுது வரவேற்பு அளித்துள்ளதை வண்டு விடு தூது சித்திரிக்கிறது.

## இறைவனை நீராட்டும் சடங்கு

இறைவன் நீராட வரும் பொழுது அணிகலன்களை எல்லாம் களைந்து, பல்லக்கில் ஏற்றி வந்துள்ளனர். எண்ணெய், நெல்லிக்காய் விழுது, அரிசி மாவு, மஞ்சள், பசுமாட்டிலிருந்து பெறப்படும் ஐந்து பொருள்கள், தேன், கரும்புச்சாறு, கனிகள், இளநீர், சந்தனக்குழம்பு ஆகியனவற்றை ஒவ்வொன்றாக ஊற்றி நன்னீரால் முழுக்காட்டும் வழக்கம் இருந்துள்ளது. இறுதியாக வேதமந்திரங்கள் ஓதப்பட்ட கலசங்களில் உள்ள நீரை ஊற்றிக் குளிப்பாட்டி, பட்டாடையால் ஈரம்

---

37. தி.சங்குப்புலவர் (வி.உ.), கச்சி ஆனந்த ருத்திரேசர் வண்டு விடு தூது, ப.25.

போகத் துடைத்துள்ளனர். இறைவனை நீராட்டுவதை வண்டுவிடு தூது விரிவாகக் கூறுகிறது.

" பாவைமகி ழெண்ணெய் பயினெல்லி மாமஞ்சள்
ஆவின்வரு மைந்து மளாவியது – தாவினறும்
பாறயிர்நெய் தேன்வேழப் பைஞ்சாறு பல்லமிர்தம்
வீறு பல விதமென்கனிகள் – ஊறுமிள
நீர் சந்தனக்குழம்பு நீவில் விரைநறுநீர்
கூர்சந்த வேதக் குருக்கலநீர் – சீர்தந்த
எல்லா முறையினினி தாடி..."[38]

என்ற கண்ணிகள் சிவபெருமான் நீராடும் வைபவத்தை எடுத்துரைக்கிறது.

## ஆலத்தி எடுத்தல்

இறைவன் பவனி வரும் பொழுது விலை மகளிர் சோறு கலந்த ஆலத்தி எடுத்துள்ளதை மான்விடு தூது சுட்டிக் காட்டுகிறது.

" பரதவித மாதர் படிதம் பயிற்றச்
சுரத மடவாரயினி சுற்ற"[39]

என்று கூறுகின்றது.

## இறைவன் பவனி வரும்போது செய்யப்படும் சடங்குகள்

மணவை திருவேங்கடமுடையான் மேகவிடு தூது புரட்டாசித் திருநாளில் திருமால் பவனி வருதலைக் கூறுகிறது.

" காவணமு மென்பூங் கமுகுங் கலியுங்
கோவணஞ் செய்து கிளர்ந்தோங்கப் – பூவணி

---

38. தி.சங்குப்புலவர் (வி.உ.), கச்சி ஆனந்த ருத்திரேசர் வண்டு விடு தூது, ப.26.
39. உ.வே.சாமிநாதையரவர்கள் (கு.உ.), மிதிலைப்பட்டிக் குழந்தைக் கவிராயர் இயற்றிய மான்விடு தூது, ப.21.

தோரணி நின்று சுடர் தூண்டப் பத்திதொறும்

பூரணகும்பம் புடைவீங்க”[40]

பவனி வந்துள்ளார். வீதிகளில் பந்தலிட்டுக் கமுகுத் தோரணங்கள் நாட்டியுள்ளனர். மக்கள் அனைவரும் கூட்டமாக நின்று பூரணக் கும்பம் ஏந்திக் கற்பூரம் காட்டியுள்ளனர். வைணவர்கள் வேத மந்திரங்கள் ஓதியுள்ளனர். சந்தனம், கற்பூரம், சாந்து, பசுந்தாது மணம் எங்கும் வீசியது. துந்துமி, சுரிசங்கம், சின்னம் போன்றன ஒலிக்கப்பட்டன. வாத்தியங்கள் இசைக்கப்பட்டன. பொன், மரகதம், முத்துப்பதித்தக் குடைகள் சூழ்ந்து வந்தன. கவரி வீசியுள்ளனர். பொற்காம்பிற் சேர்க்கப்பட்ட ஆலவட்டத்தைச் சிவிகையில் மாட்டி இருந்தனர். ஐந்தாம் நாள் திருவிழாவில் தங்கக் கருட வாகனத்தில் இறைவனை அழைத்து வரும் வழக்கம் இருந்துள்ளதையும் இத்தூது நூல் விளக்குகிறது.

## இறைவனுக்கு ஆடை அணிகலன்கள் அணிவித்தல்

மனிதர்களைப் போலவே இறைவனையும் ஆடை அணிகலன்களால் அலங்கரித்துள்ளனர். வண்டுவிடு தூதில் **129–160** வரையுள்ள கண்ணிகள் இதனைச் சிறப்பாகப் பேசுகின்றன. தங்கச் சங்கிலியைச் சிவபெருமானுக்கு அரைநாணாக இறுகக் கட்டியுள்ளனர். நல்ல பட்டாடையை மேலே போர்த்தியுள்ளனர். குங்குமம், கோரோசனை, புனுகு, சந்தனம், கத்தூரி, கருப்பூரம் ஆகியனவற்றைக் குளிர்ந்த நீரில் கரைத்து மார்பில் பூசியுள்ளனர். மகரந்தப்பொடி, சுண்ணப்பொடி, பிற மணம் தரும் பொடிகள் ஆகியனவற்றைச் சந்தனக்குழம்பின் மேல் அப்பி வைத்துள்ளனர். ஈரம் போவதற்காகச் சந்தனம், கருப்பூரம், ஏலம், தேன், எரிகாசு இவற்றை அகிற்புகையுடன் கலந்து காட்டியுள்ளனர்.

---

40. ஆசிரியர் பெயர் குறிப்பிடப்பெறவில்லை, மணவை திருவேங்கடமுடையான் மேகவிடு தூது, ப.12.

வைரத்தால் செய்யப்பட்ட நெற்றிச்சுட்டியை மாட்டியுள்ளனர். நெற்றிப்பட்டம் ஒன்றைக் கட்டியுள்ளனர். மகரக் குழையைக் காதுகளில் அணிவித்துள்ளனர். கட்டுவடத்தைக் கழுத்தில் கட்டியுள்ளனர்.

நிறம் பொருந்திய மணிகளால் செய்யப்பட்ட வாகுவலயத்தைத் தோளில் பூட்டியுள்ளனர். பொன்னால் செய்யப்பட்ட மாலைகளும், பூமாலைகளும், ஒன்பது வகைப் பெரிய மணிமாலைகளும் மார்பில் சூட்டியுள்ளனர். இலை வடிவமாகச் செய்யப்பட்ட பசும்பூண்களை மாட்டினர். கைகளில் பொற்காப்பு இட்டுள்ளனர். கைவிரல்களில் கணையாழிகள் பூட்டியுள்ளனர். கால்களில் வீரக் கண்டையைக் கட்டி அலங்காரம் செய்துள்ளனர். இவ்வாறு அலங்காரம் செய்த பின்னர் கண்ணாடி முன் அழைத்துச் சென்று இறைவனின் திருவுருவத்தைக் காணச் செய்துள்ளனர். இன்றும் திருக்கோயில்களில் கருவறைக்கு முன்பாகக் கண்ணாடி மாட்டி வைக்கும் வழக்கம் பின்பற்றப்படுகிறது.

## பூசைக்குரிய பொருள்கள்

பூசையின் போது பயன்படுத்தும் விளக்கு வகைகளையும், வேறு பல பொருள்களையும் தமிழ்விடு தூது எடுத்துரைக்கிறது. அடுக்குத்தீபம், தங்கத்தீபம், முத்துத்தீபம், இடபதீபம், புருடா மிருக தீபம், தட்டம், அக்காரலத்தி, கும்ப தீபம், கற்பூர தீபம் ஆகிய தீப வகைகளை **231–238** ஆகிய கண்ணிகள் பட்டியலிடுகின்றன. கண்ணாடி, குடை, சாமரை, ஆலவட்டம், விசிறி முதலியவையும் பூசையில் பயன்படுத்தும் வழக்கம் இருந்துள்ளது.

“ தங்குறல் போற் கண்ணாடி யங்கணுற

………………………………………………………………………

துங்கமுடி மேற்குடை வெண்சோதிவிட”[41]

என்ற கண்ணியில் இச்செய்திகளைக் காணலாம்.

---

41. தி.சங்குப்புலவர் (வி.உ.), மதுரைச் சொக்கநாதர் தமிழ் விடு தூது, ப.36.

## இறைவனுக்கு உணவு அளித்தல்

இறைவனை நீராட்டி, அலங்கரித்த பின்னர் உணவு படைக்கும் வழக்கம் இருந்துள்ளது.

“ வைத்தநறும் பாளிதமும் வண்டயிர் நெயக்காரம்
மெத்து சுவைப்பயறு மென்கடுகு – பொத்து
புளி முதல் வெவ்வேறுவிராய்ப் போக்கின்றமைந்த
மிளிரமுதும் வெற்ற வமுதும் – ஒளிர் கருனை
பாகு துவையல்…”[42]

எனப் பலவகையான படையல்கள் இட்டுள்ளனர். நல்ல பால்சோறு, கட்டித்தயிர், நெய், சர்க்கரைப் பொங்கல், மிகுந்த சுவையுடைய பயறு, கடுகு கரைத்த புளி கலந்த சோறு, வெண் பொங்கல், பொரிக்கறி, குழம்பு, துவையல், பலவகை வற்றல்கள், ஊறுகாய் வகைகள், எள்ளுருண்டை, நெய் சேர்த்த களி, கூழ், வெல்லப் பாகு, மணல் போன்ற பாகு, பானகம், இளநீர், கரும்புச்சாறு, நீர்மோர், பழச்சாறு, பால், தயிர், தேன் ஆகியவற்றைப் படைத்துள்ளனர். கையையும், கலத்தையும் கழுவிவிட்டுள்ளனர். பின்னர் சாதிக்காய், தக்கோலம், ஏலம், கிராம்பு, பச்சைக் கற்பூரம் ஆகிய ஐந்து வாசனைப் பொருள்களை உண்பதற்கு இறைவனுக்கு அளித்துள்ளதை அறிய முடிகிறது.

## இறைவனின் வாகனங்கள்

தூது இலக்கியத்தில் இறைவனின் வாகனங்களாகக் கருடன், அன்னம், மயில், பெருச்சாளி ஆகியன சுட்டப்பட்டுள்ளன.

இறைவனை இத்தகைய வாகனங்களில் ஏற்றியே பவனி வந்துள்ளனர் மக்கள்.

“ தூய சிறைக் கருடன் தோண்மீதிற்”[43]

---

42. தி.சங்குப்புலவர் (வி.உ.), கச்சி ஆனந்தருத்திரேசர் வண்டு விடு தூது, ப.28.
43. ஆசிரியர் பெயர் குறிப்பிடப்பெறவில்லை, மணவை திருவேங்கடமுடையான் மேகவிடு தூது, ப.13.

" அன்னத்தானத்தானா மந்நத்தான் மாமனாம்"[44]

" தந்திவதனத்தொரு தந்திக் கடவுள்
பெருச்சாளிப் பிடர்வரக் கூளித்திரள் களிகூர்
அயில் வேற் கந்தக் குருபரன் மயில்வர"[45]

போன்ற கண்ணிகள் இறைவன் அமர்ந்திருக்கும் வாகனங்களைக் குறிப்பிடுகின்றன.

ஆறு கைகள், மூன்று கண்கள், ஆறு முகங்கள் என்று தெய்வத்துக்கு உருவம் படைத்துள்ளனர். தெய்வங்களுக்கு வாகனமாக அஃறிணை உயிர்களை உருவாக்கியதற்குச் சில காரணங்கள் இருக்க வேண்டும். ஆறறிவுடைய மனிதர்களை இறைவனுக்கு வாகனமாக, அணிகலனாகப் பயன்படுத்துவதில்லை. இதனைச் சில சான்றுகள் கொண்டு ஆராய்ந்து நோக்கும் பொழுது, சில கருத்துக்கள் புலப்படுகின்றன.

"முற்காலத்தில் இந்திய மக்களுக்கு வாகனமாகப் பயன்பட்டன எருதுகளே. ஆகவே, அக்காலத் தந்தைக் கடவுளுக்கு இடபம் சிறந்த ஊர்தி ஆக்கப்பட்டது"[46] எனவும், "கடவுள் கோட்பாடு வளர்ச்சி பெற்ற காலத்தில் ஆதிக்குடிகளிடமிருந்த விலங்கு, பறவைகள் கடவுளோடு இணைக்கப்பட்டுக் கடவுளின் வாகனங்களாக மாறின"[47] எனவும் அறிஞர்கள் கருத்துரைக்கின்றனர்.

இவற்றின் வாயிலாக, பழைய காலத்தில் மக்கள் ஊர்திகளாகப் பயன்படுத்திய விலங்குகளே, காலப்போக்கில் இறைவனுக்கு வாகனங்கள் ஆக்கப்பட்டன என்ற கருத்துப் பெறப்படுகிறது. உயிர்த்தோற்றத்தில் அனைத்து உயிரினங்களும் சமம் என்பதை மக்களுக்கு உணர்த்தவும், யாரும் யாருக்கும் பகை

---

44. உ.வே.சாமிநாதையரவர்கள் (கு.உ.), ஸ்ரீ பத்மகிரிநாதர் தென்றல் விடு தூது, ப.1.
45. க.இ.க. கந்தசுவாமி (தொ.ஆ.) இணுவைச் சின்னத்தம்பிப் புலவர் அருளிய பஞ்சவன்னத்தூது, ப.116.
46. ந.சி.கந்தையா, தமிழ் இந்தியா, ப.133.
47. வாழ்வியற் களஞ்சியம், தொகுதி இரண்டு, ப.439.

இல்லை என்றுணர்த்தவும் இத்தகையவற்றை இறைவனின் வாகனங்களாக மாற்றியிருக்கலாம். நல்ல குணங்களைக் கொண்டவர்களைத் தீயவர்கள் அடையும் பொழுது, அத்தீயவர்களும் நல்லவர்களாக மாற வழியுண்டு என்ற தத்துவத்தைப் போதிக்கவும் விலங்குகள், பறவைகளை இறைவனுக்கு வாகனமாக்கி, அணியாக்கிச் சிறப்பித்திருக்கலாம் என்று கருத இடமளிக்கிறது.

## அவதாரக் கதைகள் உணர்த்தும் தத்துவங்கள்

மணவை திருவேங்கடமுடையான் மேகவிடு தூது நூலில் திருமாலின் அவதாரச் செய்திகள் காணப்படுகின்றன.

" மீனமாய்க் கூர்மமாய் மேதினியைக் கீண்ட கோட்டு
ஏனமா யாளரியா யீன்றாளுந் – தாகனாம்
வாமனமாய் வில்லு மழுவும் வலமுங் கைக்கொண்டி
ராமவுரு மூன்றாயிகல் புரியுங் – கோமளஞ்சேர்
கண்ணர் பிரானுமாய்க் கல்கியுமாய் மேனாளில்
வண்ணமெடுக்கும் வடிவினான்"[48]

என்று அவதாரங்களை வரிசையாகக் கூறுகிறது இத்தூது நூல்.

இத்தகைய அவதார வடிவங்களைத் தூது இலக்கியப் பாடல்களில் புகுத்தியுள்ளனர்.

"அவதாரம் என்பதற்கு பிறத்தல்: இறங்குகை உயர்ந்த பிறப்பு"[49] என்று அகராதி பொருள் கூறுகின்றன. அவதாரம் என்பதற்கு மேலிருந்து கீழ் இறங்குகை என்னும் பொருள்படுகின்றது. மக்களால் உயர்ந்த பிறப்பு என்று கருதப்படுகின்ற இறைவன், பல அவதாரங்களை எடுத்து மக்களைக் காப்பாற்றுவதாக இத்தூது நூல் கூறுகின்றது. தன்னுடைய உயர்ந்த நிலையிலிருந்து தாழ்ந்த நிலையாகிய மனிதன்,

---

48. ஆசிரியர் பெயர் குறிப்பிடப்பெறவில்லை, மணவை திருவேங்கடமுடையான் மேகவிடு தூது, ப.9.
49. கழகப் புலவர் குழு, கழகத் தமிழ் அகராதி, ப.50.

விலங்கு போன்ற பல அவதாரங்களை இறைவன் எடுப்பது பல உள்ளார்ந்த பொருள்களை விளக்குவதாக அமைகின்றது.

இறைவன் விட்டுக்கொடுத்துக் கீழே இறங்கி வருவது போல் மன்னுயிர்களும் விட்டுக்கொடுத்து வாழ வேண்டும் என்னும் உயரிய தத்துவத்தைப் போதிப்பதாக உள்ளது. மேலும் எளிய நிலைக்கு இறைவன் இறங்கி வருவதைப் போல, மனிதனும் செயற்கரிய நல்ல செயல்களைச் செய்து தெய்வ நிலையை அடைய முடியும் என்ற உட்கருத்தையும் உணர்த்துவதாக அவதார வடிவங்கள் அமைந்துள்ளன. எனவே தான், இத்தகைய இறைவன் பற்றிய அவதாரங்களைத் தூது இலக்கியத்தில் புகுத்திப் பாடியுள்ளனர் எனலாம்.

## ஆதி சேஷன் உணர்த்தும் செய்தி

திருமால் ஆதிசேஷன் என்னும் பாம்பின் மீது பள்ளி கொண்டு இருக்கின்றார் என்று பல இலக்கியங்கள் கூறுகின்றன. திருநறையூர் நம்பி மேகவிடுதூது நூலிலும் பாம்பு பற்றிய குறிப்புக் காணப்படுகின்றது.

" பைந்நாகப் பள்ளி மேற்பங்கயங்கள் பூந்தொளிரு
மைந்நாகம் போற் கண்வளருநாட் பொன்னாய"[50]

என்ற கண்ணி பாம்பணையின் மேல் நீலமலையைப் போன்ற திருமால் பள்ளி கொள்வதைச் சித்திரிக்கிறது.

தெய்வத்தை, தங்கள் கற்பனைக்கு எட்டாத உருவத்தை, ஒரு சிறிய பாம்பு தாங்குவதன் காரணத்தை முன்னோர்கள் அறிந்திருக்க வேண்டும். சில சான்றுகள், பழங்கால மக்களின் கருத்தாக்கங்களுக்கு உறுதி கூறுவனவாக அமைகின்றன.

"பூமிக்குக் கீழே, ஏழு உலகங்கள் ஒன்றின் மேல் ஒன்றாய்த் தட்டுகள் போல் அமைந்துள்ளன. இந்த பாதாள லோகத்திற்கு நெடுந்தொலைவில் ஆதிசேஷன்

---

50. டி.கே.இராமானுஜ ஐயங்கார் (உ.ஆ.), திருநறையூர்நம்பி மேகவிடு தூது, ப.9.

இருக்கிறார். அவர் விஷ்ணுவின் திருமேனியாய் விளங்குகிறார். பற்பல லோகங்களைத் தாங்கும் பூமியை ஆதிசேஷன் தாங்குகிறார்”[51] என்று ஸ்ரீ விஷ்ணு புராணம், திருமாலின் திருமேனியாக ஆதிசேஷன் விளங்குவதையும் பூமியைத் தாங்குவதையும் குறிப்பிடுகின்றது.

“ஆதிசேஷன் துருவ நட்சத்திரத்தைச் சுற்றிப் பாம்பு போல வளைந்திருக்கும் மண்டலம் இது. பூமியை ஆதிசேஷன் தாங்குகிறது என்று புராணம் சொல்லுகிறது. அதை மெய்ப்பிப்பது போல், துருவமானது **56,800** ஆண்டில் சுற்றும் வட்டத்திற்குள் இருக்கும் ஒரே நட்சத்திர மண்டலம் ஆதி சேஷன் தான்”[52] என்று கலைக்களஞ்சியம் குறிப்பிடுகின்றது.

அக்கால மக்களும் இத்தகைய அறிவியல் செய்திகளை அறிந்திருந்தனர். வானியல் அறிவும் பெற்றிருந்தனர் என்பதை விளங்கிக் கொள்ளலாம். ஆனால், இத்தகைய அறிவுப்பூர்வமான செய்திகளைச் சமயத்தின் வாயிலாக மக்களிடையே பரப்பினர் என்பதை உணர்ந்து கொள்ள முடிகின்றது. ஏனெனில், அன்று இயற்கையைத் தெய்வமாக நினைத்து வழிப்பட்டுள்ளனர். தெய்வத்தின் மீது நம்பிக்கை கொண்டதால், பூமியைத் திருமாலாகவும், பூமியைத் தாங்கும் ஆதிசேஷனை, திருமாலுக்கு மெத்தையாகவும் உருவகப்படுத்தி வழிப்பட்டிருக்க வேண்டும் என்று கருத இடமளிக்கிறது.

### கூத்துக்கள் ஆடுதல்

பணத்திற்காக, இறைவன் பெயரைச் சொல்லி மக்கள் கூத்தாடியுள்ளனர். சின்ன வன்னியனார் பணவிடு தூது,

“ ....................... ஆசை அறியாயோட மாரியம்மன்

தன்னுடைய பேரால் தலைமேல் கரகம் வைத்துத்

---

51. கிருஷ்ணமாச்சாரியார் (உ.ஆ.), அஷ்டாதச புராணங்கள் என்னும் பதினெண் புராணங்கள், ஸ்ரீ விஷ்ணு புராணம், ப.87.
52. கலைக்களஞ்சியம், தமிழ் வளர்ச்சிக் கழகம், ப.372.

துன்னுதளைச் சுத்தும் சொருகியே – பன்நிறமாய்ப்

பொட்டிட்டுச் சேலை கட்டி போதவெண்ணீறு இட்டு உடுக்குக்

கொட்டுக்கு இசைய நின்று கூத்தாடி”[53]

என்று கூறுகின்றது. இத்தகைய கூத்துக்கள் ஆடப்பட்ட காரணத்தைச் சில சான்றுகளின் வாயிலாக அறிய முடிகின்றது. “தொன்மைச் சமுதாயங்களில் பண்பாட்டு வளர்ச்சியில் குழுப்பாடல், குழுக்கூத்து இரண்டும் சிறந்து விளங்கின. பெரும்பான்மைப் பழங்குடியினரின் கடவுள் வழிபாடு குழுக் கூத்தாகவே அமைந்திருந்தது. குழுக் கூத்துக்களால் கடவுளரை மகிழ்வித்துத் தாம் வேண்டியதைப் பெறலாம் என்று பழங்கால மக்கள் நம்பினர்”[54] என்பர்.

இக்கருத்துக்களின் வாயிலாக, தொன்றுதொட்டே கூத்துக்கள் ஆடப்பட்டதையும், இக்கூத்துக்கள் இறைவனைத் தொடர்புபடுத்தியே ஆடப்பட்டுள்ளதையும் நோக்கும்பொழுது அக்காலத்தில் மக்கள் இறையனுபவங்களில் மூழ்கித் திளைத்துள்ளதை அறிய முடிகின்றது. கூத்துக் கலைகளிலும் சிறப்புற்று விளங்கியதைக் காணும்பொழுது சமுதாயத்தில் சமய வளர்ச்சி, கலை வளர்ச்சி இரண்டும் ஒருங்கே வளர்ச்சி பெற்று வந்திருக்க வேண்டும்.

## கோடை விழா

சித்திரை மாதம் பௌர்ணமியன்று கோடைவிழா கொண்டாடப்பட்டதை அழகர் கிள்ளைவிடு தூது குறிப்பிடுகிறது. இன்றும் இத்திருவிழா நடைபெறுகின்றது. இத்திருவிழாவின் போது, அழகர்மலையில் இருந்து கிளம்பி மதுரை தல்லாகுளம் வந்து தங்கியுள்ளார். மறுநாள் காலை சூரியன் எழுகின்ற நேரத்தில் பெருமாள் வைகை ஆற்றில் எழுந்தருளியுள்ளார். பல்வேறு திருக்கண்

---

53. ம.வே.பசுபதி (பதி.ஆ.), சின்னவன்னியனார் பணவிடு தூது, ப.86.
54. செண்பகம் ராமசுவாமி, கிரேக்க லிரிக்க கவிதைகளும், சங்க இலக்கியக் கவிதைகளும் ஒப்பீடு, ப.117.

மண்டபங்களிலும் தங்கி அருள்புரிந்துள்ளார். வேனில்விழா என்பதால் நீர்த்துருத்தியை வைத்து நீரை அடித்து மக்களுக்குக் குளிர்ச்சியூட்டுவதை பக்தர்கள் வழக்கமாகக் கொண்டுள்ளனர்.

" கூடலிற் கூடலெனுங் கூடற்றிருநகரில்
ஏடலர் தாரான் எழுந்தருளி – ஆடலுடன்
கல்லா குளங்கள் கரையப் பணிவார்முன்
தல்லாகுளம் வந்து சார்ந்தருளி "[55]

என்ற கண்ணிகளில் அழகர்பெருமாள் தல்லாகுளம் வந்து அருளிய செய்தி புலப்படுத்தப்படுகிறது. திருவிழாக்காலத்தில் திருவில்லிப்புத்தூரிலிருந்து ஆண்டாள் சூடிய மாலையை அழகர்கோவிலுக்கு எடுத்து வருவதும் வழக்கமாக இருந்துள்ளது.

## பழக்க வழக்கங்கள் நம்பிக்கைகள்

தூது நூல்களில், அரசர்கள், மக்கள் பின்பற்றிய பழக்க வழக்கங்கள் அதிகமாக உள்ளன. மக்கள் பயன்பாட்டில் இருந்த நாணயங்களைப் பற்றிய செய்திகளும் காணக்கிடைக்கின்றன. "மனிதர்கள் தொடர்ந்து செய்யும் வழக்கங்கள் பழக்கங்களாய் மாறி நாளடைவில் அதுவே நம்பிக்கையாய் நிலைத்து விட்டதையும் அறியலாம். பழக்க வழக்கம், நம்பிக்கை ஆகியவற்றின் முதிர்ந்த நிலையே நாகரிகமும் பண்பாடும் எனலாம்"[56]

## அரசர் குல வழக்கங்கள்

யாழ்ப்பாணத்தை ஆட்சி செய்த கைலாயநாதன் என்னும் மன்னன் வீதி வலம் வருவதற்கு முன்பாகச் சில வழக்கங்களைப் பின்பற்றுவதைப் பழக்கமாக

---

55. தி.சங்குப்புலவர் (வி.உ.), திருமாலிருஞ்சோலை மலை அழகர் கிள்ளை விடு தூது, பக்.48–49.
56. தா.குளோரி, நாட்டுப்புறப்பாடல்களில் இடம்பெறும் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும், முன்னுரைப்பகுதி.

வைத்திருந்ததைப் பஞ்சவன்னத்தூது எடுத்துரைக்கிறது. **96–139** வரையுள்ள பாடல்களில் மன்னனின் அன்றாட வழக்கங்கள் கூறப்பட்டுள்ளன.

அதிகாலையில் தாமரைக் குளத்தில் நீராடிக் காலை வேளைக்குரிய கடமைகளை முறைப்படி செய்துள்ளான் கைலாயநாதன். பூசைக்குரிய நல்ல பூக்களைத் தேர்ந்தெடுத்து உமாதேவியையும் சிவபிரானையும் வழிபட்டுள்ளான். பின்னர், உணவு உண்ணும் இடம் சென்று,

" மணமிகு கருணை மடைப்பள்ளியெய்திப்
பணியணியினமொடு பண்பு வீற்றிருந்து
மதிநிறை கலையொடு வகைவளைந் தென்னக்
கதிர்மணிக் கின்னமும் கன்னலும் பரப்பி
வெண்மணி குவித்தென மிளிர்வ பொற்றட்டம்"[57]

என்பது பாடல். அரச ஊழியர்களோடு சேர்ந்து வெண்முத்துப்போன்ற சோறு, கறிவகைகள், நெய், பழம், பால் ஆகிய ஐவகை உணவுகளையும் உண்டுள்ளான். அதற்குப் பிறகு, குளிர்ந்த நீரால் கை, கால், முகம் கழுவிவிட்டு, அரண்மனைக்குள் சென்று வாசனையுள்ள கஸ்தூரி முதலியவற்றை உடலில் பூசியுள்ளான். மணிமுடி, அரைஞாண், மணிப்பட்டம், பொற்சுட்டி, தண்டை, சிலம்பு, பொற்பதக்கம், மணிக்காறை ஆகிய அணிகளை அணிந்துள்ளான்.

மலர்மாலை சூடி, கவசத்தை மார்பில் அணிந்து, பட்டுடைகளை உடுத்தி, வீரத்தண்டையினைக் காலில் அணிந்து வீதி வலம் வர தன்னைத் தயார்படுத்திக் கொண்டதாகப் பஞ்சவன்னத் தூது நூல் குறிப்பிடுகிறது.

காலையில் சிற்றுண்டி உணவுகளை உண்ணாமல் அரசு ஊழியர்களோடு சேர்ந்து பேருண்டி உண்ணுதல், உணவு உண்ட பின்னரே ஒப்பனை செய்தல் ஆகிய வழக்கங்களை மன்னன் பின்பற்றியுள்ளதைக் காணமுடிகிறது.

---

57. க.இ.க.கந்தசுவாமி (தொ.ஆ.), இணுவைச் சின்னத்தம்பிப் புலவர் அருளிய பஞ்சவன்னத் தூது, ப.130.

## வீதி உலா வருதலை அறிவிக்கும் மரபு

கட்டியங்காரன் வழியாக அரசன் வீதியில் உலா வருதலை அறிவிக்கும் மரபு இருந்துள்ளது. அவன் முத்துமணித்துரா, கடுக்கன், சங்கிலி, சரப்பணி, சரிகைத் தலைப்பா, மோதிரம் முதலியன அணிந்து, கையில் தங்கப்பிரம்பை ஏந்தி அரண்மனை வாசலில் உட்கார்ந்திருந்ததாகப் பஞ்சவன்னத்தூது கூறுகிறது.

" முத்துமணித் துராக்கடுக்கன் சங்கிலி சரப்பணி
சரிகைத் தலைப்பாகை முண்டாசு

சித்திரப் பொன்னாழியிரு கைவிரலணிந்து தங்கச்
செழும்பிரம்பு செங்கைப் பிடித்துமே

எத்திசையும் மதித்திடுங் காலிங்கன் குமாரன்
கயிலா யேந்திரன் கீர்த்தி

துத்தியஞ் செய்திடும் வாசற் கட்டியக்காரன்
சபைதனிற் தோன்றி னானே"[58]

என்பது அக்கண்ணிகள்.

## மானியம் அளித்தல்

கிராம மக்கள் செய்த வேலைகளுக்கு வரிநீக்கப்பெற்ற நிலங்களை நன்கொடையாக அளிக்கும் வழக்கம் இருந்துள்ளது.

" பயிரடைப்பிலே குறைத்துப் பற்றடைப்பைத் தள்ளி
மயிர் பிளந்து பார்த்து வரைந்து – கயிறெடுத்து"[59]

அந்நிலங்களை முறையாக, மயிர் இடைவெளியும் விட்டுப் போகாமல் அளந்து பார்த்துக் கொடுத்துள்ள செய்தியைப் பணவிடு தூது சுட்டுகிறது.

---

58. க.இ.க.கந்தசுவாமி (தொ.ஆ.), இணுவைச் சின்னத்தம்பிப் புலவர் அருளிய பஞ்சவன்னத்தூது, ப.115.
59. இரா.நிர்மலா தேவி (பதி.ஆ.), முத்துவிசயரகுநாத சேதுபதி மீது பாடிய பணவிடு தூது, ப.81.

## சிவிகையில் செல்லுதல்

தன்வந்தர்களைச் சிவிகையில் சுமந்து செல்லும் வழக்கம் இருந்துள்ளதை புல்லைக் குமரேசர் பணவிடு தூது எடுத்துரைக்கிறது.

" வாழ்ந்துசிலர் தண்டிகைமேல் வாடாமல் அங்கிருக்கச்
சூழ்ந்து சில பேரைச் சுமக்க வைப்பாய்"[60]

என்ற கண்ணியின் வாயிலாக மனிதர்களை மனிதர்களே சுமக்கும் அவல நிலையைக் காணமுடிகிறது.

## பதக்கம் அணிவித்தல்

விவாதங்களில் ஈடுபட்டு வெற்றி பெற்றால் மார்பில் பதக்கம் அணிவிக்கும் வழக்கம் இருந்துள்ளதை,

"கூப்பிடுத லெல்லாமெங் கோமானே நீ மார்பில்
ஆப்பிடுதலாற்றாம லல்லவோ – சேய்ப்படுவார்"[61]

எனப் பணவிடுதூது சுட்டிக்காட்டுகிறது.

## வரிகள் வசூலித்தல்

பலவிதமான பெயர்களில் வரிகளை மக்களிடையே இருந்து பெறும் வழக்கம் இருந்துள்ளது.

" போட்டிவரியும் பிடித்தவரி காவல்
காட்டுவரியும் காடிக்காரர் வரி – தோட்டவரி
சீட்டுவரி தோப்புவரி செக்குவரி கொடிக்கால்
போட்டவரி ஆள்வரியும் புன்செய்வரி – மாட்டுவரி
சேற்றுவரி சுங்கவரி தீர்வைச்சம் மாதவரி
வாய்த்தரெட்டிப் போகு மகமை முதல் – ஏற்று இருக்கும்
மானியத்துக்கு உள்ள வரியும் தொகைவரியும்
மேனிவரி சாதிவரி மேல்உபரி"[62]

---

60. ம.வே.பசுபதி (பதி.ஆ.), புல்லைக்குமரேசர் பணவிடுதூது, ப.15.
61. இரா.நிர்மலா தேவி (பதி.ஆ.), முத்து விசயரகுநாதசேதுபதி மீது பாடிய பணவிடு தூது, ப.79.
62. ம.வே.பசுபதி (பதி.ஆ.), புல்லைக்குமரேசர் பணவிடுதூது, பக்.19–20.

என ஒவ்வொன்றுக்கும் தனித்தனியே வரி வசூலித்துள்ளனர்.

## பட்டத்து யானையை அழகு செய்தல்

மன்னனின் பட்டத்து யானையை அலங்கரிக்கும் வழக்கம் அக்காலத்தில் இருந்துள்ளது.

" கொற்ற வீரக்குஞ்சர மொன்றைக்
கால்விலங்ககற்றிக் கங்கை நீராட்டிக்
கோலமார் கந்தக் குழம்பு மட்டித்து
வித்தக வொளிபெற விளக்கு பொற்பட்டம்
மத்தகத் தணிந்து வளர்பிறை மருப்பிற்
கிம்புரி யாதி கிளர்கல னணிந்து"[63]

என்ற கண்ணிகள் யானையை அழகுபடுத்தியதை எடுத்துரைக்கின்றன.

யானைப்பாகர்கள் அரசனுடைய யானையின் கால்கட்டுகளை நீக்கி நீராட்டுகின்றனர். நறுமணப் பொருட்களை யானையின் மீது பூசியுள்ளனர். பின்னர் பொற்பட்டிகையையும், கொம்பிலே கிம்புரியையும், கழுத்தில் கண்டையையும் பூட்டி அலங்கரித்த செய்தியை அறிய முடிகிறது.

## நிறமூட்டுதல்

நெசவில் பயன்படுத்தப்படும் பஞ்சு நூலுக்குப் பலவகை நிறமூட்டும் வழக்கம் பழக்கத்தில் இருந்ததைத் தமிழ்விடு தூது சுட்டுகிறது.

" பஞ்சிபடா நூலே பலர்நெருடாப் பாவேகீண்
டெஞ்சியழுக் கேறா வியற் கலையே – விஞ்சுநிறந்
தோயாத செந்தமிழே சொல்லே"[64]

63. க.இ.க. கந்தசுவாமி (தொ.ஆ.), இணுவை சின்னத்தம்பிப் புலவர் அருளிய பஞ்சவன்னத் தூது, ப.131.
64. தி.சங்குப்புலவர் (வி.உ.), தமிழ் விடு தூது, ப.19.

எனத் தமிழின் பெருமையைக் கூறும் போது நிறமூட்டப்படும் வழக்கம் அறிய வருகிறது. இராட்டையில் பஞ்சு நூற்கும் போது அறுந்தால், அந்நூலை நாவால் தடவி, கைகளில் உருட்டிப் பின்னர் இராட்டையில் இருக்கும் பஞ்சோடு சேர்த்து நூல் உருவாக்கியதையும் இக்கண்ணிகள் எடுத்துக் காட்டுகின்றன.

## யோகா செய்தல்

நீண்ட நாள் வாழ்வதற்காக முனிவர்கள் வாயுவை உண்டும் உள்ளேயடக்கியும் இடைகலை, பிங்கலை, சுமுமுனை போன்ற பயிற்சிகளைச் செய்தும், கும்பகம், பூரகம் செய்தும் யோகப்பயிற்சி செய்தும் வந்துள்ளனர்.

> " ஆயுவை நீட்ட அருந்தவத்தோர் பூரகஞ்செய்
> வாயுவையுன் பின்னே வரவழைப்பாய்"[65]

என்கிறது அழகர் கிள்ளை விடு தூது.

"இடதுபக்க மூக்குத்துவாரத்தின் வழியாக மூச்சுக்காற்றை உள்ளே இழுப்பது பூரகம் எனப்படும். இது பதினாறு மாத்திரை அளவாம். இழுத்த மூச்சை அறுபத்து நான்கு மாத்திரை அளவு நிறுத்தி வைத்தல் கும்பகமாகும். இடப்பக்க வழியாக உள்ளே இழுத்து நிறுத்தி வைத்த மூச்சை, வலப்பக்க மூக்குத்துளை வழியாக முப்பத்திரண்டு மாத்திரைப் பொழுதில் வெளியே விடுதல் இரேசகமாகும்"[66] என்பர். மூச்சுப் பயிற்சியை முறையாகச் செய்து வந்தால் நோய்கள் அகன்று, இளமையாகப் பல ஆண்டுகள் உயிர் வாழலாம் என்ற உண்மையை மக்கள் அறிந்திருந்தனர் என்ற உண்மையை உணர முடிகின்றது.

## சிவனடியாரை உபசரித்தல்

உண்மையான சிவ அடியவர்களை மக்கள் பத்துவிதமான முறைகளில் வரவேற்று உபசரித்துள்ளனர்.

---

65. தி.சங்குப்புலவர் (வி.உ.), திருமாலிருஞ்சோலைமலை அழகர் கிள்ளை விடு தூது, ப.39.
66. சுவாமிநாதன் .எஸ் (பதி.பா.), தமிழ் இலக்கியத்தில் மருத்துவம், ப.112.

“ போக்க வமைந்த சிவ புண்ணியங்கள் பத்துமவை

ஆக்குமருண்மூர்த்தம் பதினொன்றும்”[67]

என்று வண்டுவிடு தூது குறிப்பிடுகிறது.

எதிர்கொள்ளல், பணிவு காட்டல், இருக்கை அளித்தல், திருவடியைக் கழுவி விடுதல், அர்ச்சனை செய்தல், தூபம் தீபம் காட்டுதல், புகழ்தல், உணவு கொடுத்தல், போற்றுதல் எனப் பலவாறு சிவனடியார்களை உபசரிக்கும் வழக்கம் இருந்துள்ளமையை வண்டு விடு தூது பறைசாற்றுகிறது.

## கைவிரலைப் பார்க்கும் மரபு

பெண்கள் காலையில் எழுந்ததும் தங்களுடைய கைவிரல்களை முதலில் பார்த்துவிட்டுப்பின் கண்ணாடியில் முகத்தைப் பார்க்கும் வழக்கத்தைப் பின்பற்றியதை அழகர் கிள்ளைவிடு தூது எடுத்துரைக்கிறது. இதனை,

“.................................... தெரிவையர்கள்
ஆர்த்தவிரல் உன்முக மொப்பாகையா லேகையைப்
பார்த்து முகமதனைப் பாரென்பார்”[68]

என்ற கண்ணிகள் புலப்படுத்துகின்றன.

## கண்ணாடியை மங்கலப் பொருளாகக் கருதுதல்

மன்னர்களின் சிம்மாசனத்தின் முன்பாகக் கண்ணாடி மாட்டும் வழக்கம் இருந்ததைக் கண்ணாடி விடு தூது எடுத்துரைக்கிறது. ஐந்து திரவியங்களில் கண்ணாடி முதல் மங்கலப் பொருளாகக் கருதப்படுவதை,

“ தன்னேரி லாதமன்னன் தானிருக்கும் ஆசனத்தின்

முன்னேயிருக்கு முகுரமே – துன்னியிடும்

---

67. தி.சங்குப்புலவர் (வி.உ.), கச்சி ஆனந்த ருத்திரேசர் வண்டுவிடு தூது, ப.73.
68. தி.சங்குப்புலவர் (வி.உ.), திருமாலிருஞ்சோலைமலை அழகர் கிள்ளை விடு தூது, ப.39.

பைந்தார் நகரிற் பகுதிரவியங்களினில்

ஐந்தா மதில்முதற் கண்ணாடியே”[69]

என்று கண்ணாடி விடு தூது கூறுகிறது.

## ஏட்டுச் சுவடிகளில் மஞ்சள் பூசுதல்

தமிழ்மொழி வளர்ந்த விதத்தினைத் தமிழ் விடு தூது,

“ மஞ்சட் குளிப்பாட்டி மையிட்டு முப்பாலும்

மிஞ்சப் புகட்ட மிக வளர்ந்தாய்”[70]

என்று கூறுகிறது. பழைய காலத்தில் ஏட்டுச் சுவடிகளில் எழுத்துக்கள் எழுதினர். அவை தெளிவாகத் தெரிவதற்கு மஞ்சளையரைத்தும், கரியைக் கரைத்தும் பூசும் வழக்கம் இருந்துள்ளதைத் தமிழ்விடு தூது எடுத்துரைக்கிறது.

## நீர்வார்த்துக் கொடுக்கும் மரபு

இறைவன் பவனி வரும் பொழுது நகரில் வாழ்ந்த செல்வந்தர்கள் சிவனடியார்களுக்குப் பொன்னை வாரி வழங்கியுள்ளனர்.

“ மடல் கொடருவின் மலரினமரர்
படியிற்றிடறு படுப்ப – அடியர்
உதவு கனக மழையொடுதவும்
உதக மதனை யொழிப்ப”[71]

என்கிறது வண்டுவிடு தூது. பொன்னைப் பெற்றச் சிவனடியார்கள் அதனை ஏழைகளுக்குக் கொடுக்கும் வழக்கம் இருந்துள்ளது. அவ்வாறு பொன் வழங்கும் போது நீர்வார்த்துக் கொடுத்தலை மரபாகக் கொண்டிருந்துள்ளனர்.

---

69. குட்டியபப்ப கவுண்டர், திருப்பேரூர்ப் பட்டீசர் கண்ணாடிவிடு தூது, ப.2.
70. தி.சங்குப்புலவர் (வி.உ.), தமிழ் விடு தூது, ப.20.
71. தி.சங்குப்புலவர் (வி.உ.), கச்சி ஆனந்த ருத்திரேசர் வண்டு விடு தூது, ப.32.

## காலைப்பிடித்து அம்மி மீது ஏற்றுதல்

சிவபெருமான் உமாதேவியாரைத் திருமணம் செய்த போது, தேவியின் ஒரு காலைப் பிடித்து அம்மி மீது ஏற்றிய செய்தியை மான்விடு தூது குறிப்பிடுகிறது.

" தலையரையன் சென்னி கவர்ந் தாருமணஞ்செய்ய
மலையரையன் பெற்றெடுத்த மாதைத் – தலைநாள்
ஒருகால் பிடித்திருந்தா ருன்னையுல குய்ய
இருகால பிடித்திருந்தா ரென்றும்"[72]

இந்நிகழ்வு அக்காலத்தில் திருமணத்தின் போது மணமகளின் காலை மணமகன் அம்மி மீது ஏற்றி வைக்கும் வழக்கம் இருந்துள்ளதை எதிரொலிக்கிறது.

## சுடுநெய்யில் கை வைக்கும் மரபு

அழகர் கிள்ளை விடு தூதில் தலைவி, கிளியைப் புகழ்ந்து பேசும் போது, உன்னைத் தவிர பச்சை நிறமுடையவை இந்த உலகத்தில் இல்லை என்று சுடுநெய்யில் கையை வைத்துச் சூளுரைப்பதை.

" ஆரதிகம் ஆர்தாழ் வறைந்திடாய் – ஊரறிய
நெய்யிற்கை இட்டாலு நீதான் பசுமையென்றே
கையிட்டுச் சுத்தி கரிக்கலாம் – மெய்யின்"[73]

என்று கூறுகிறாள் தலைவி.

சுடுநெய்யில் கைவைத்து மெய்கூறுவது பண்டைக்கால மக்கள் இயல்பாக இருந்துள்ளது. பொய் கூறினால் கை வெந்து விடும் என்றும் உண்மை பேசினால் சுடாது என்பதும் அவர்களுடைய நம்பிக்கையாக இருந்துள்ளது. தலையில் அடித்துச் சத்தியம் செய்தும், கோயில் முன் சத்தியம் செய்தும் தங்களை நிரூபிக்கும் வழக்கம் இன்றும் நடைமுறையில் காணப்படுகின்றதொன்றாகும்.

---

72. உ.வே.சாமிநாதையரவர்கள் (கு.உ.), மான் விடு தூது, பக்.1–2.
73. தி.சங்குப்புலவர் (வி.உ.), திருமாலிருஞ்சோலைமலை அழகர் கிள்ளை விடு தூது, ப.41.

## நன்னிமித்தம் பார்த்தல்

ஒரு காரியம் செய்யத் துவங்கும் முன்பு, நல்ல அறிகுறிகளைப் பார்ப்பது நிமித்தம் ஆகும். தீய அறிகுறிகளைக் கண்டால், செயல்களைச் செய்வதற்குத் தயக்கமும் ஏற்படுவதை நிமித்தங்கள் உணர்த்தி நிற்கின்றன.

## கோதூளி லக்கினம் பார்த்தல்

மாலைப்பொழுது பசுக்கள் வீடு திரும்பும் பொழுது தூசி கிளம்புவதுண்டு. அந்நேரத்தை நல்ல நேரமாகக் கருதி மக்கள் வெளியே செல்லும் வழக்கம் இருந்துள்ளது.

"விக்கனந்தீரக குளிர்ந்த வேளையிலே கோதூளி
லக்கினம் பார்த்தன்பா யெழுந்தருள்வாய்"[74]

என்று தென்றல் விடு தூது இச்செய்தியை உறுதிப்படுத்துகிறது.

" பூவை முழுதுணர்க போறங் கணித்தாந்தை
பாவு புகழ்ப்பறவை யோராலும்"[75]

என்கிறது வண்டு விடு தூது.

அதாவது, ஆந்தையின் குரலை சோதிடம் கூறுபவனைப் போல நன்மை, தீமைகளை விளக்கும் அறிகுறியாகக் கருதும் வழக்கம் கொண்டிருந்ததை அறிய முடிகிறது.

## பெரியவர்களை வணங்குதல்

வயதான பெரியவர்களைக் கண்டால் காலில் விழுந்து வணங்கும் மரபு அக்காலத்தில் இருந்துள்ளதை,

" பால் குடிக்கும் பச்சை குழந்தை நீயானாலும்
கால்பிடிப்பார் கோடி பேர் கண்டாயே"[76]

எனும் தூதுக் கண்ணி விளக்குகிறது.

---

74. உ.வே.சாமிநாதையரவர்கள் (கு.உ.), ஸ்ரீ பத்மகிரிநாதர் தென்றல் விடு தூது, ப.8.
75. தி.சங்குப்புலவர் (வி.உ.), கச்சி ஆனந்த ருத்திரேசர் வண்டு விடு தூது, ப.19.
76. தி.சங்குப்புலவர் (வி.உ.), திருமாலிருஞ்சோலைமலை அழகர் கிள்ளை விடு தூது, ப.40.

## கண்ணேறு கழித்தல்

பிறருடைய கண்பார்வையால் ஏற்படும் குற்றங்களுக்குப் பரிகாரமாக நெற்றியில் காப்பு இடுதல், இறைவனுக்குக் காணிக்கை அளித்தல் ஆகியன வழக்கத்தில் இருந்துள்ளதைக் கண்ணாடி விடு தூது எடுத்துரைக்கிறது.

" பெண்களிலை யோவென்றன் பெண்ணையார் பார்த்தனரோ
கண்பட்ட தென்று நுதற் காப்பிட்டாள்
நீரிறைத்து வீசியுமின்னேரிழைக்குக் கண்ணூறு
திரிதெனக் காணிக்கை செப்பனிட்டாள்"[77]

என்னும் கண்ணிகள் தாய் தன் மகளுக்குக் கண்ணேறு கழித்தலைச் சுட்டிக் காட்டுகிறது.

## நிலக்காப்பிடுதல்

" பண்ணுந் தொழிலைப் பகைத்து நிலக் காப்புமணிந்
துண்ணும் படியெல்லாம் உண்டருளி"[78]

என்ற கண்ணி குழந்தைகளுக்குக் கண்ணேறு படாமல் இருப்பதற்காக, மண்ணைக் குழைத்துத் திலகம் இட்டுள்ளதை எடுத்துரைக்கின்றது.

## போதைப்பொருட்கள் செய்தல்

புகையிலையிலிருந்து ஒரு வகைச் சாராயத்தையும், கஞ்சாக் கலந்த மதன காமேசுர லேகியம் என்னும் மருந்தையும் தயாரிக்கும் வழக்கம் இருந்துள்ளதைப் புகையிலை விடு தூது சுட்டிக் காட்டுகிறது.

" மறைவாய் வளர்ந்து மனுக்களுண்டு பண்ணி
நிறைவாய நாலுமுக நேர்ந்து"[79]

---

77. குட்டியப்ப கவுண்டர், திருப்பேரூர்ப் பட்டீசர் கண்ணாடி விடு தூது, ப.10.
78. தி.சங்குப்புலவர் (வி.உ.), கச்சி ஆனந்த ருத்திரேசர் வண்டு விடு தூது, ப.42.
79. சீனிச் சர்க்கரைப் புலவர், புகையிலை விடு தூது, ப.7.

"அதனகா மீசுரமா யார்க்குமயல் பூட்டும்

மதனகா மீசுரமச் சானோ"[80]

என்ற கண்ணிகள், புகையிலையிலிருந்து போதைப் பொருட்கள் உருவாக்கும் பழக்கம் இருந்ததைக் காட்டுகிறது.

## வண்டுகளைப் பிடித்து விளையாடுதல்

குழந்தைகள் இன்று தொலைக்காட்சியிலும் இணைய தளத்திலும் உட்கார்ந்து விளையாட்டுக்களை விளையாடுகின்றனர். ஆனால் அன்று,

" அண்டிச்சிறுவர் எடுத்து ஆட்டுவதல் லாதுமற்ற

வண்டு விளையாட்டுக்கு வாய்க்குமோ"[81]

என்று புல்லைக்குமரேசர் பணவிடு தூது, சிறுவர்கள் நேரிடையாகப் பொன்வண்டைப் பிடித்து விளையாடி மகிழ்ந்துள்ளதைக் குறிப்பிடுகிறது.

## சேநெய் கொடுத்தல்

குழந்தை பிறந்தவுடன் முதலில் சேநெய் கொடுப்பார்கள். சேநெய் – சேய்க்கு + நெய், அதாவது குழந்தைக்கு எண்ணெய் கொடுத்தலையே சேநெய் என்று அழைத்திருப்பார்கள். விளக்கெண்ணெய், பால் முதலானவற்றைக் கலந்து கொடுத்துள்ளதை அழகர் விடு தூது கூறுகிறது.

" வரைத்தடந் தோள் அவுணன் வன்காயங்கூட்டி

அரைத்திடுஞ்சேனை அருந்தி"[82]

என்பது அக்கண்ணி. ஆனால் இன்று பிறக்கும் குழந்தைகளுக்குச் சீனி அல்லது கற்கண்டைத் தண்ணீரில் கரைத்து வாயில் கொடுக்கின்றனர்.

---

80. சீனிச் சர்க்கரைப் புலவர், புகையிலை விடு தூது , ப.9.
81. ம.வே.பசுபதி (பதி.ஆ.), புல்லைக் குமரேசர் பணவிடு தூது, ப.14.
82. தி.சங்குப்புலவர் (வி.உ.), திருமாலிருஞ்சோலைமலை அழகர் கிள்ளை விடு தூது, ப.42.

## ஆண்குழந்தைக்குச் சிறப்புச் செய்தல்

ஆண் குழந்தைப் பெற்றெடுத்தால் தங்க அணிகலன்கள் இட்டு அழகு பார்க்கும் வழக்கம் இருந்துள்ளதை,

“ பொன்நகையைப் பற்றுவர்போல் புத்திரரைப் பெற்றெடுத்தோர்
பொன் இட்டு எடுத்துப் புதுமைசெய்வார்”[83]

என்று புல்லைக் குமரேசர் பணவிடு தூது சுட்டிக் காட்டுகிறது. பெண் குழந்தைகளைவிட ஆண் குழந்தைக்குச் சமுதாயத்தில் முன்னுரிமை அளிக்கப்பட்ட செய்தியை இதன் வாயிலாக உணர முடிகின்றது.

## காளாஞ்சிப் பாத்திரம் பயன்படுத்துதல்

வெற்றிலைச் சாற்றைத் துப்புவதற்கென்று ‘காளாஞ்சி’ என்ற ஒருவகைக் கலனைப் பயன்படுத்தியுள்ளதை மான் விடு தூது எடுத்துக் காட்டுகிறது.

“பொன்னடைப்பை காளாஞ்சி பூஞ்சிவிறி வீககுஞ்சம்”[84]

என்ற பாடலடி காளாஞ்சிப் பாத்திரம் பற்றிய குறிப்பைத் தருகிறது.

## சூதாட்டம், ஆடுபுலி ஆட்டம் ஆடுதல்

பணம் வைத்து ஆடுபுலி ஆட்டம், சூதாட்டம் எனப் பல விளையாட்டுக்களை மக்கள் விளையாடியுள்ளனர்.

“ சோடு போட்டுச் சிவப்புச் சோடு பொருங் குங்குமத்தை
விடு போய்ச் சேரவென்று விட்டுவிடு – கூடாமற்
பச்சையை வெட்டு படுத்திடா மற்க றுப்பை
வைச்சு மறிசிவப்பை வந்துவிடு – வெச்சென்று
கேட்டுருட்டிக் குங்குமத்தைக் கிட்ட வைத்துப் பன்னிரண்டு
போட்டு முடக்காறு போட்டுவிட்டால் – ஆட்டங்
கெலித்துதென்று சூது கெலிப்பித்துக் காட்டி”[85]

---

83. ம.வே.பசுபதி (பதி.ஆ.), புல்லைக் குமரேசர் பண விடு தூது, ப.15.
84. உ.வே.சாமிநாதையரவர்கள் (கு.உ.), மான்விடு தூது, ப.21.
85. இரா.நிர்மலா தேவி (பதி.ஆ.), முத்து விசயரகுநாத சேதுபதி மீது பாடிய பணவிடு தூது, ப.80.

என்ற கண்ணிகள் சூதாட்டம் ஆடும் முறைகளை விளக்குகின்றன. பச்சை, கறுப்பு, சிவப்பு, குங்கும நிறக் காய்களைப் பயன்படுத்திச் சூதாடும் வழக்கம் இருந்துள்ளதை அறிய முடிகிறது.

## அரிசி போடுதல்

இறந்தவர்களுக்கு வாயில் அரிசி போடும் வழக்கம் இருந்துள்ளதைப் புல்லைக் குமரேசர் பணவிடு தூது குறிப்பிடுகிறது.

" முன் அரசை ஆண்டோரும் மோட்சத்தைக் கண்டபின்பு

பொன்னரிசி யாய், வாயில் போய்ப் புகுவாய்"[86]

என்பது அக்கண்ணி. நாட்டை ஆண்ட மன்னன் இறந்து போனால், பொன்னால் செய்யப்பட்ட அரிசியை வாயில் போட்டிருக்கலாம் என்று கருத இடமளிக்கிறது.

## திவசம் கொடுத்தல்

இறந்த முன்னோர்களுக்குத் திவசம் கொடுத்துள்ளனர். இச்செய்தியை,

" பாட்டனுக்குத் திவசம் பட்டுப்பிடவை தந்த

தாட்டனுக்குச் சொன்ன சனிவாரம்"[87]

என்று பணவிடுதூது சுட்டிக் காட்டுகிறது.

## பார்வை மிருகம் வைத்தல்

வேடர்கள் மான்போன்ற விலங்குகளைப் பிடிப்பதற்கு மானைப் போல உருவம் செய்து வைத்துப் பிடித்ததை அழகர் கிள்ளைவிடு தூது எடுத்துரைக்கிறது.

" தூள் பிடிக்கும் வேடர் ஒருபார்வையால் நூறு

மான் பிடிக்கின்ற வகையென்ன"[88]

என்ற கண்ணி பார்வை மிருகம் குறித்த செய்தியைப் புலப்படுத்துகிறது.

---

86. ம.வே.பசுபதி (பதி.ஆ.), புல்லைக் குமரேசர் பண விடு தூது, ப.15.
87. இரா.நிர்மலா தேவி (பதி.ஆ.), முத்துவிசயரகுநாத சேதுபதி மீது பாடிய பணவிடு தூது, ப.84.
88. தி.சங்குப்புலவர் (வி.உ.), திருமாலிருஞ்சோலைமலை அழகர் கிள்ளை விடு தூது, ப.44.

செய்து வைத்த உருவத்தைக் காட்டில் விட்டுவிட்டு, அவ்விலங்கினைப் போலக் கத்தி வேட்டையாடியுள்ளனர்.

" பாவையர்கைச் சங்கம் பறிப்பதற்கு நின்சங்கந்
தீவகமோ நேமித் திருமாலே"[89]

என்ற கண்ணியில், பெண்களுடைய கைவளையல்களைப் பறிப்பதற்குத் திருமால் கையில் வைத்திருக்கும் சங்கு இணக்கமாகப் பார்ப்பது போல உள்ளது என்று கூறுகிறாள் தலைவி. சங்கு, பார்வை மிருகம் போன்று செயல்படுவதை மறைமுகமாகச் சித்திரித்தாலும், ஒரு பொருளைப் போல செய்து வைத்து வேட்டையாடும் வழக்கம் இருந்துள்ளதைத் திருநறையூர் நம்பி மேகவிடு தூது எடுத்துரைக்கிறது.

## கன்றைக் காட்டிப் பாலைக் கறத்தல்

பால் கறப்பவர்கள் மாட்டின் அருகில் முதிர்ந்த கன்றைக் காட்டிவிட்டுப் பால் கறப்பதை வழக்கமாகக் கொண்டிருந்துள்ளதை,

" சதிரிளமா தர்க்கிரங்கொ ணாதோ – முதிர்கன்றைக்
கொட்டத்து வெண்பால் குனிந்து கறப்பார் மூலையில்
விட்டுக் கறப்பதையும் விட்டீரோ"[90]

என்று அழகர்கிள்ளைவிடு தூது விளக்குகிறது.

## பிறை ஆயிரம் பற்றிய நம்பிக்கை

" தொழுந்த கைமையான் சுகந்த புயவான்
எழுந்த பிறையாயிரங்கள் தொழுவோன்"[91]

எனும் கண்ணியில், ஆயிரம் பிறையைக் கண்டவர்கள் தீர்க்காயுள் பெறுவர் என்னும் நம்பிக்கை மக்களிடையே இருந்துள்ளது.

---

89. டி.கே.இராமானுஜ ஐயங்கார் (உ.ஆ.), திருநறையூர் நம்பி மேகவிடு தூது, ப.17.
90. தி.சங்குப்புலவர் (வி.உ.), திருமாலிருஞ்சோலைமலை அழகர் கிள்ளை விடு தூது, ப.51.
91. உ.வே.சாமிநாதையரவர்கள் (கு.உ.), மான் விடு தூது, ப.17.

## சோதிடம் பார்த்தல்

சோதிடம் பார்க்கும் வழக்கம் காலங்காலமாக நடைமுறையில் உள்ளது. நாள் குறிப்பதற்கும், எதிர்காலத்தை அறிவதற்கும் சோதிடம் பார்த்துள்ளதாகத் தூது இலக்கியங்கள் கூறுவதை,

“ சோதிடரைக் காலபலன் சொல்என்றால் பேர்கேட்டுத்
தீதில்லா நட்சத்திரம் அறிந்து – ஓதும்அவன்
ராசி கண்டு வாக்கிலே ராசபல நன்மை என்றும்
வீசுசனி அட்டமத்தில் மேவுதென்றும் – பேசு செவ்வாய்
பன்னிரண்டாம் இடத்தில் பார்வையென்றும் மாரகம்
முன் அஞ்சு சென்று பதின்மூன்றாண்டு – இன்னம்
இருக்குதென்றும்”[92]

சோதிடர்கள் கூறுவதைக் காணலாம்.

“அந்தணர்கள் சோதிடத்தை ஆராய்ந்து செல்வரிடம்
வந்துலவன் சொல்வது நின் வாஞ்சையே”[93]

எனும் கண்ணி, அந்தணர்கள் சோதிடம் பார்த்ததைக் கூறுகிறது.

## வழக்கத்தில் இருந்த ஆடை வகைகள்

செங்குந்தர் துகில் விடு தூது, அன்றைய காலகட்டத்தில் மக்கள் பயன்படுத்திய சேலைகள், சால்வை, அங்கி, ரவிக்கை ஆகியனவற்றை எடுத்துரைக்கின்றது. **227–240** வரையுள்ள கண்ணிகள் இச்செய்திகளைத் தாங்கியுள்ளன.

வெள்ளைக் கருப்புச் சிகப்பு மேலெழுத்துப்பட்டு, வெண்பட்டு, செம்பட்டு, மிக்க கரும்பட்டு, மஞ்சள் வண்பட்டு, பச்சைப்பட்டு, கோலத்துப்பட்டு, குங்குமப்பூ

---

**92.** ம.வே.பசுபதி (பதி.ஆ), புல்லைக் குமரேசர் பண விடு தூது, ப.**29.**
**93.** ம.வே.பசுபதி (பதி.ஆ), கவிராயர் பண விடு தூது, ப.**48.**

பட்டு, மின்சரிகைப் பாகு சேலை, மென்சரிகைச் சேலை, சந்திரகாவி சேலை, மேலெழுத்துச் சாதி ராச சேலை, வச்சிர கண்டைச் சேலை, மதுரை சல்லாச் சேலை, செச்சை பூ சரபந்தச் சேலை, சேலத்தெழுத்து நகைச் சேலை, மாதளம் பூச்சேலை, மல்லிகைப்பூச்சேலை, சீதள மாந்துத்திப்பூச் சேலை, மாதிரிபாக்கத்துச் சல்லாச் சேலை, கலசபாக்கச் சேலை, காஞ்சிபுரச் சேலை, சால்வை, அங்கி, மாலை கண்டைச் சாதிராவத்திரம், தலைப்பா, கச்சு ரவிக்கை போன்ற ஆடைவகைகள் பயன்பாட்டில் இருந்தமையைச் செங்குந்தர் துகில்விடு தூது வழி அறிய முடிகிறது.

## பயன்பாட்டிலிருந்த காசு வகைகள்

முத்து விசயரகுநாத சேதுபதி பணவிடு தூது, புல்லைக்குமரேசர் பணவிடு தூது, கவிராயர் பணவிடு தூது, சின்னவன்னியனார் பணவிடு தூது ஆகிய தூது நூல்கள் அனைத்தும் அன்றைய பயன்பாட்டில் இருந்த காசு, நாணய வகைகளைப் பட்டியலிடுகிறது. ஒரே அமைப்புடைய காசுகள், நாணயங்கள் இத்தூது நூல்களில் பரவலாக இடம் பெற்றுள்ளன. எனவே, கவிராயர் பணவிடு தூதில் சொல்லப்பட்டுள்ள காசு, நாணயம் மட்டும் இங்கே எடுத்துரைக்கப்படுகின்றன.

மாடை, உயர்சாணார்க்காசு, பல்லங்கிக்காசு, வன்னச் சீப்புக்காசு, பூ இட்ட காசு, காசொடுவில் இட்ட காசு, அச்சுதன் காசு, சன்னக்கீத்துக்காசு போன்றவை காசு வகைகள்.

சொக்கப்பணம், அவித்தேகான் பணம், ராமய்யன் பணம், நாகப்பன் பணம், தொண்டைமான் பணம், உறையூரான் பணம் என ஆட்சியாளர்களின் பெயர்களில் பணம் வழங்கப்படுவதை அறிய முடிகிறது.

மோகரம், வராகன், தஞ்சைச் சக்கரம், தம்பி செட்டிச் சக்கரம், கச்சி மின்னல், சேதுபதி மின்னல், சாமியையன் மின்னல், கொல்லிமலை மின்னல், நெல்வேலி மின்னல், பூங்குடியான் மின்னல், சொற்பன்னுடையான் மின்னல், ஆய்புர் மின்னல், நாரசிங்கன் மின்னல், காஞ்சிபுர மின்னல், மன்னாரூர் மின்னல்,

கண்டசர மின்னல், தூரத்தூரன் மின்னல், ராயபுர மின்னல் போன்றவையும் இருந்துள்ளன.

சொன்னபுது நாணயம், காயபுர நாணயம், புங்கனூர் நாணயம், மருதுகானாணயம், தாணு சென்னப்பட்டணத்து நாணயம், மாதேவி பட்டணத்து நாணயம் ஆகிய ஊர்ப்பெயர்களில் அமைந்த நாணய வகைகளும் பயன்பாட்டில் இருந்துள்ளது அறிய வருகிறது.

**முடிபுகள்**

தூது இலக்கியங்கள் அக்கால அரசியல் சூழலைத் தெளிவாக எடுத்துரைக்கின்றன. பணவிடுதூது முத்துவிசயரகுநாத சேதுபதி என்ற மன்னனை நிர்வாகத் திறமைப் படைத்தவனாகச் சுட்டிக்காட்டுகின்றது. சேதுபதியின் உறவினர்கள் ஆட்சிப்பொறுப்பில் பெரும்பங்கு வகித்துள்ளதை அறிய முடிகின்றது. சேதுபதியின் ஆட்சிக்காலத்தில் பாளையங்களாகப் பிரிக்கப்பட்ட பகுதிகளில் நிர்வாகம் செய்த ஆட்சியாளர்களின் பெயர்கள் தெரியவருகின்றது. அவர்களிடமிருந்து சேதுபதி மன்னன் கப்பம் பெற்றுள்ளான் என்ற செய்தியும் பெறப்படுகின்றது. கிறித்துவ சமயம் வளர்ந்ததில் சேதுபதிக்கு பெரும் பங்குண்டு என்பதனை முத்துவிசயரகுநாத சேதுபதி மீது பாடப்பட்ட பணவிடு தூது எடுத்துரைக்கின்றது.

யாழ்ப்பாணம் இணுவைப்பகுதியை ஆட்சி செய்த காலிங்கராயனின் மகன் கைலாயநாதனின் சிறப்புக்களைப் பஞ்சவன்னத்தூது எடுத்துக் கூறுகின்றது. நெசவாளர்களின் நிலையை எடுத்துரைப்பதாகச் செங்குந்தர் துகில்விடு தூது அமைந்துள்ளது. தமிழ்நாட்டுக்கு உட்பட்ட சில பகுதிகளைச் செங்குந்தர்கள் ஆட்சி செய்துள்ளனர் என்ற வரலாற்றுச் செய்தியை இத்தூது எடுத்துரைக்கின்றது.

விசயரகுநாதத் துரைத் தொண்டைமான், தன்னுடைய ஆட்சியில் அட்டவணை, மணியம் என்ற அதிகாரிகளை நியமித்திருந்தார் என்பதனை

புல்லைக் குமரேசர் பணவிடுதூது சுட்டிக்காட்டுகின்றது. மான்விடுதூது சிவகங்கையை ஆட்சிசெய்த வடுகநாத துரையின் கீழ் மந்திரியாகப் பணியாற்றிய தாண்டவராய பிள்ளையின் சிறப்புக்களைப் பேசுகின்றது.

குறுக்கு வழிகளில் பணம் சம்பாதித்த மருத்துவர்கள், கொல்லர்கள், இரசவாதிகள், பேயோட்டிகள், தாசிகள், புராணக் கதைகளைக் கூறுபவர்கள் போன்றவர்கள் சமூகத்தில் இருந்துள்ளனர் என்ற செய்தியை உள்ளடக்கியதாகப் பணவிடு தூது நூல்கள் விளங்குகின்றன.

காலம் காலமாகத் தமிழகத்தில் அடிமைநிலை இருந்துள்ளது என்பதனை மயில்விடு தூது சித்தரிக்கின்றது. இசைக்கலை தழைத்தோங்கி வளர்ந்ததைத் தூது இலக்கியங்கள் உணர்த்தி நிற்கின்றன. பலவித இராகங்கள், தாளங்கள், பண்கள் இசைக்கத் தெரிந்த கலைஞர்கள் சமுதாயத்தில் இருந்துள்ளனர் என்கின்றது பணவிடுதூது.

தமிழர்கள் பிற நாடுகளுடன் வாணிகத் தொடர்பு வைத்திருந்ததைச் செங்குந்தர் துகில்விடு தூது உணர்த்துகின்றது.

பலவிதமான சமயச் சடங்குகளைப் பின்பற்றியதைத் தூது இலக்கியங்கள் எடுத்துக் காட்டுகின்றன. பலவகையான விளக்குகள் பயன்பாட்டில் இருந்தமையைத் தமிழ்விடு தூது எடுத்துரைக்கிறது.

இறைவனுக்கு உண்பதற்குப் பலவகையான உணவுப் பொருட்கள் படைத்துள்ளனர். உணவு உண்டபின் ஐந்து விதமான வாசனைப் பொருட்களை இறைவனுக்கு அளித்துள்ளனர். சித்திரை மாதத்தில் அழகர்கோயில் திருவிழா நடைபெறுதல், அழகர் தல்லாகுளம் வருதல், வைகையாற்றில் எழுந்தருளுதல் போன்ற செய்திகளை அழகர் கிள்ளை விடு தூது தருகின்றது.

மக்களால் உயர்வாகக் கருதப்படுகின்ற மன்னன் தனக்குக் கீழ் பணியாற்றுகின்ற ஊழியர்களோடு சேர்ந்து அமர்ந்து உணவு உண்ட செய்தியைப் பஞ்சவன்னத் தூது தெரிவிக்கிறது. கட்டியங்காரன் என்பவன் அரசன் வீதி உலா வருதலை அறிவிப்பவனாகப் பணியாற்றியுள்ளதைக் காணமுடிகின்றது.

மானியம் அளித்தல், சிவிகையில் செல்லுதல், பதக்கம் அணிவித்தல், வரிகள் வசூலித்தல், பட்டத்து யானையை அழகு செய்தல் ஆகியன வழக்கத்தில் இருந்துள்ளதைப் பார்க்க முடிகின்றது. யோகப் பயிற்சிகள் செய்தால் நீண்டநாள் வாழலாம் என்ற உண்மையை அழகர் கிள்ளை விடுதூது போதிக்கிறது.

பத்துவிதமான முறைகளில் சிவனடியார்களை உபசரிக்கும் வழக்கம் இருந்துள்ளன. காலையில் எழுந்ததும், கைவிரலைப் பார்த்தல், கண்ணாடியில் முகம் பார்த்தல், ஏட்டுச்சுவடிகளில் மஞ்சள் பூசுதல், பொன்தானம் அளிக்கும் போது நீர்வார்த்துக் கொடுத்தல், திருமணத்தின் போது மணமகளின் காலைப்பிடித்து அம்மிமீது ஏற்றுதல் போன்ற வழக்கங்கள் தூது இலக்கிய காலகட்டத்தில் இருந்துள்ளதைக் காண முடிகின்றது.

சுடுநெய்யில் கைவைத்து சத்தியம் செய்யும் வழக்கத்தை அழகர் கிள்ளைவிடு தூது சுட்டிக்காட்டுகிறது. வெளியே செல்வதற்கு முன்பாக நல்ல சகுனங்களைப் பார்த்துச் செல்லும் வழக்கம் இருந்துள்ளது.

பெரியவர்களை வணங்குதல், கண்ணேறு கழித்தல், வண்டுகளைப் பிடித்து விளையாடுதல், சேநெய் கொடுத்தல், ஆண் குழந்தைகளுக்குச் சிறப்புச் செய்தல், காளாஞ்சிப் பாத்திரம் பயன்படுத்துதல் ஆகிய செய்திகளைத் தூது நூல்கள் எடுத்துரைக்கின்றன.

இறந்தவர்களுக்கு வாயில் அரிசி போடுதல், இறந்த முன்னோர்களுக்குத் திவசம் கொடுத்தல் ஆகியன பின்பற்றப்பட்டுள்ளன. விலங்குகளைப் பிடிப்பதற்குப்

பார்வை மிருகம் செய்து வைத்தல், பொய்க் கன்றைக் காட்டிப் பாலைக் கறத்தல், சோதிடம் பார்த்தல், பிறை தொழுதல் ஆகியன வழக்கத்தில் இருந்துள்ளன.

பல்வேறு வகையான சேலை, காசு, நாணய வகைகளைப் பயன்படுத்தியுள்ளமையை தூது இலக்கியங்கள் எடுத்தியம்புகின்றன.